# தங்கள மூளையைப்பயன்படுத்தி பணிபுரி வோருக்கு பிரிங்கால் மகாபிரிங்கராஜ் கூந்தல் தைலம்

## ஆயுர்வேத முறைப்படி வெற்றிகர மாக தயாரித்த பிரிங்கால் உங்கள் கபாலத்திற்கு குளிர்ச்சி தருகிறது



கபாலத்தை குளிர்ச்சியாக வைத்திருக்க மிகச் சிறந்தது. மகாபிரிங்கராஜ் கூந்தல் தைலம் என்று பல்லாண்டுகளாகவே ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. ஆயுர்வேத முறைப்படி மிக கண்டிப்பான முறையில் தயாரித்த அதில் டில் ஆயில், பிரிங்கராஜ் பச்சிலை சந்து, மற்றும் 12 ஆயுர்வேத மருந்துகள் சேர்ந்துள்ளன. இவை அனைத்தும் உங்கள் கபாலத்தை குளிர்ச்சியாக வைத்திருக்கின்றன. குளிப்பதற்கு முன்னும்அல்லது பின்னும் பிரிங்கால் கூந்தல் தைலத்தை உங்கள் கூந்தலில் தினசரி அழுத்தி தேய்க்கவும். அது உங்களுக்கு குளிர்ச்சியைக் கொடுத்து அயர்ச்சியைப்போக்கும். சுகமாக தூங்க உதவும். உங்கள் கூந்தலை பளபளப்பாகவும், ஆரோக்கியமாகவும் விளங்கச் செய்யும்.

**பிரிங்கால்** மகாபிரிங்கராஜ் கூந்தல் தைலம் ஒரு ஆல்கத்ரா கெமிகல் தயாரிப்பு

# துறு துறு வென குழந்தைகள் இரண்டு
# 30 வயது நளினிக்கு
# மெருகூட்டி அழகு செய்து கொள்ள
# நேரமில்லை அவளுக்கு.






அவளது
மிருதுவான சருமத்தை,
இயல்பாகவே
தூய நறுமணம் கொண்டு
பாதுகாக்கும் சோப்

## மைசூர் சாண்டல்

உங்கள் சருமம் மாசு மறுவற்று
மிருதுவாக மிளிர
மைசூர் சாண்டல் சோப்.

தயாரிப்பாளர்கள்:
கவர்மெண்ட் சோப் பாக்டரி, பெங்களூர்.



பூரண விற்பனையாளர்கள்: மைசூர் சேல்ஸ் இன்டர்நேஷனல் லிமிடெட் பெங்களூர் - பம்பாய் - புது டில்லி - கல்கத்தா - சென்னை - செகந்திராபாத்

MCA/MSIL/55/3

# ஆயிரக்கணக்கான நம் நாட்டு மக்கள் தங்களுடைய சேமிப்பை உங்கள் தொழிலில் முதலீடு செய்வதென்பதன்றோ நம்பிக்கைக்குச் சான்று!



இச்சம்பவம் பல வருடங்களுக்கு முன் நடந்தது—அதாவது டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி துவங்கியபொழுது. ஆயிரக்கணக்கான மக்கள் 'அமருவதற்கு ஆசனமும், உண்பதற்கு உணவும்' உடன் எடுத்துச் சென்று டாடாவின் அலுவலகத்தின் முன் அவரது புது கம்பெனியில் பங்கு (ஷேர்) வாங்கக் காத்து நின்றனர். பணக்காரர், ஏழை, இரு சாராருமே ஒன்றுபோல் பணத்தை முதலீடு செய்தனர்.

மூன்றே வாரங்களில் சுமார் எட்டாயிரம் மக்கள் 230 லட்சம் ரூபாயை புதிய தொழில் துவக்கத்தில் முதலீடு செய்தபொழுது ஸ்ரீ தொராப்ஜீ டாடா அவர்கள் இச்சாதனையைப்பற்றி பெருமையுடன் எழுதியதாவது: 'அது ஒரு முற்றும் புதிய சுதேசி ஸ்தாபனமாக சுதேசிகளின் பணத்தையும், சுதேசிகளின் ஆக்கத்திறனையும் கொண்டு உருவாக்கப்பட்டது'.

அது நடந்தது 1907ம் ஆண்டில். இன்றும் டாடா ஸ்டீலில் அதே பொறுப்புணர்ச்சி தலைதூக்கி நிற்கிறது. இந்திய மக்களில் சுமார் எழுபத்து ஐயாயிரம் பேர் டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனியின் பங்குதாரர்களாக இருக்கும் அதே பெருமிதம் இன்று ஒரு விதத்தில் டாடாவில் தலைமுறையாக வரும் சம்பிரதாயமாகவே ஆகிவிட்டதென்று கூறலாம்.




**டாடா ஸ்டீல்**

HT-TIS-7352

# கல்கி

ஆனந்த. மார்கழி. 7 ★ டிசம்பர் 22, 1974




○ ○ ○

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே : சம்பவங்களும் கற்பனையே.

## அடுத்த இதழில்...



வெங்கட் முதல் முறையாகத் தலைமை ஏற்று நடத்தும் டெல்லி டெஸ்ட் படங்கள் : சுவையான தகவல்கள்

சட்டம் என்ன? — விசித்திர வழக்குகளைப் பற்றிய விநோதச் செய்திகள் சில.





பிம்பம் : திருமணமான பிறகும் மகளிடம் தாய் மிருதுவான ஒட்டுதலுடன் இருந்தால் அது பல தர்ம சங்கடங்களை உருவாக்கத் தானே செய்யும்? மனத்தத்துவரீதியான சிறுகதை.

ஓடுகிறார்... ஓடுகிறார்....!

மிஸ்ரா

லோக சபை

இப்படியும் நடக்கலாம்!

பரீக்ஷை எப்போ
வெச்சுக்கலாம்?

கல்லூரி
முதல்வர்

அரசியல் சார்புள்ள மாணவர்
தலைவர்

# தப்பிப் பிழைத்த தலைமை !

**ம**துரை மகாநாட்டிலிருந்து தலைவர் கருணாநிதி முழுசாகத் திரும்பிவிட்டார் என்றாலும் தலைவலி மாத்திரையும் தூக்க மருந்தும் அவருக்குத் தேவைப்பட்டிருந்தால் வியப்பதற்கில்லை !

பாராளுமன்ற தி.மு.க. அங்கத்தினர்களின் துணைத் தலைவர் விசுவநாதன் அப்படி ஒரு கலக்குக் கலக்கிவிட்டார். மந்திரிகள் மட்டத்திலேயே லஞ்ச ஊழல் மிகுந்திருப்பதாகப் பல முறை அடித்துச் சொல்லி வந்துள்ள விசுவநாதன், திண்டுக்கல், கோயமுத்தூர், பாண்டிச்சேரி தேர்தல்களில் தி. மு. க. வெட்கப்பட வேண்டிய அளவில் தோல்வி அடைந்த பிறகும் அதே தலைமை எப்படி நீடிக்கலாம் என்று மதுரையில் கேட்டிருக்கிறார். அரிசி விலை ஏற்றம், பற்றாக்குறை, பஞ்சநிலைமை எல்லாம் மக்களின் கோபத்தை உசுப்பிவிட்டிருப்பதைச் சுட்டிக் காட்டினார். மக்களிடம் மீண்டும் மதிப்புப் பெற வேண்டுமானால் தலைமை மாறி இளம் தலைமுறைக்கு வழிவிடுவதுதான் வழி என்று கூறி அதற்காகப் பொதுக் குழு அங்கத்தினர்கள் நூறு பேர்களின் கையெழுத்துக்களையும் பெற்றிருந்தார்!

இப்படி வீராவேசத்துடன் ஆரம்பித்த எதிர்ப்பு தலைவர் கருணாநிதி ராஜிநாமா செய்வதாக மிரட்டியதும் பிசுபிசுத்துவிட்டது ! கையெழுத்து வேட்டையும் வாபஸாயிற்று ! நீங்கள் ராஜிநாமா செய்தால் வேறு யார் எங்களை வழி நடத்திச் செல்ல முடியும் என்று சிலர் சரணாகதி அடைய, அமைச்சர் அன்பில் தர்மலிங்கம் சீறி எழுந்து அப்படிக் கூறுவது தி. மு. கழகத்துக்கே இழுக்கு என்று இடி முழக்கம் செய்திருக்கிறார். நல்ல தமாஷ் ! ரசித்தோம் !

உருப்படியான கொள்கை ஏதாகிலும் மதுரை மகாநாட்டில் உருவாயிற்றா என்றால் அதுவும் இல்லை ! அரிசி விலை உயர்வைத் தடுக்க, கூட்டுறவுச் சங்கங்கள் மொத்த வியாபாரத்தை மேற்கொள்ள வேண்டும் என்றும் தனியார் வியாபாரத்துக்கு இடமில்லாது செய்து விடுவது என்றும் எடுக்கப்பட்ட முடிவுகள் கலங்கிய குட்டையை மேலும் குழப்பப் போகின்றன.

கல்கி

மலர் 34
இதழ் 21

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# ஊழலுக்கு ஊக்க போனஸ்!

**க**ட்சிகளுக்குக் கம்பெனிகள் நன்கொடை அளிப்பதற்கு இருந்து வரும் தடையை நீக்க ஏற்பாடாகிறது. இதற்குச் சாதகமாக வாஞ்சூ கமிட்டி அறிக்கையைப் பயன்படுத்திக் கொள்ள முயல்கிறது இந்திரா அரசு. வாஞ்சூ அறிக்கை அரசியல் கட்சிகளுக்குக் கம்பெனிகள் நன்கொடை அளிப்பதற்கு உள்ள தடையை நீக்கிவிடலாம் என்று கூறியிருப்பது மெய்தான். ஆனால் அதை மட்டுமா அறிக்கை கூறுகிறது? காரணத்தை விளக்கி மாற்று யோசனையும் சொல்கிறது.

நன்கொடை வழங்கத் தடை இருப்பதால் கறுப்புப் பணமாகக் கம்பெனிகள் அரசியல் கட்சிகளுக்குக் கப்பம் செலுத்துகின்றன; இதனால் கறுப்புப் பணப் பொருளாதாரம் செழிக்கிறது என்று சுட்டிக்காட்டுகிறது வாஞ்சூ அறிக்கை. எனவே, எல்லாக் கட்சிகளுக்கும் தேர்தல் பிரசாரச் செலவைக் குறைந்தபட்ச அளவில் நிர்ணயித்து அதை அரசாங்கமே கொடுத்துவிடலாம் என்றும், மேற்கு ஜெர்மனியையும் ஜப்பானையும் எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம் என்றும் கூறியுள்ளது.

இதனால் வீண் செலவுகள் தவிர்க்கப்படுவதுடன் நேர்மையாகத் தேர்தல்கள் நடக்கவும் வழி பிறக்கும். ஆனால் பின்னால் உள்ள யோசனைகளைக் காற்றில் பறக்கவிட்டு விட்டுத் தனக்குச் சாதகமாக உள்ள முதல் அம்சத்தை மட்டும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது இந்திரா அரசு. ஆளும் கட்சிதானே கம்பெனி நன்கொடைகளால் மிகப் பெரும் பயன் பெற முடியும் !

பணத்தால் வென்று பதவிக்கு வருபவர்கள் வாய்மையே வெல்லும் என்ற அரசுச் சின்னத்தின் கீழ் ஆள்கிறார்கள்!

# அரும்பெரும் புதிய ஃபாஷன்.



RADEUS/L-122

# லக்மே லிப்ஸ்டிக்ஸ் மற்றும் நெய்ல் இனாமல்.

ஆழ்ந்து, பளிச்சிடும் லிப்ஸ்டிக் எங்கே என்ற ஆர்வம் எங்கும். புதிய லக்மே அல்ட்ரா-க்ரீம், அல்ட்ரா-ஃப்ராஸ்ட், அல்ட்ரா-க்ளோ, லிப்ஸ்டிக்ஸ் வருகின்றன, வசீகர ஃபாஷன்களில், சிவப்பு, ஸ்கார்லட், மற்றும் பழுப்பு நிறங்களில்.

அழகுச் சிகரமாக்கும் லக்மே இனாமல்— இதைக் கண்டு மயங்குவீர்.



**ஸ்பானிஷ் போர்ட்**

மனம் மயக்கும் ரோஜா நிற லிப்ஸ்டிக். அதோடு ஸ்பானிஷ் போர்ட் நெய்ல் இனாமல் வேண்டுமெனக் கேளுங்கள்.

**பர்கண்டி ரெட்**

இந்த உற்சாகமூட்டும் ரெட் லிப்ஸ்டிக் தடவி, ஃபாஷன் உலகில் கிளர்ச்சி யூட்டுங்கள். அதற்குப் பொருந்தும் பர்கண்டி ரெட் நெய்ல் இனாமலும் தடவுங்கள்.

**கோன்யாக் ப்ரௌன்**

இந் நிறம் உங்கள் உதடுகளையும், நகங்களையும் பிறர் போற்றச் செய்யும்.

**க்ளாரெட் ரெட்**

தூங்கிவழியாமல், விழிப்பூட்டித் துடிப்பூட்டும் இந் நிறத்தில், உதடுகளும், நகங்களும் துறுதுறுவென்றிருக்கும்.

லக்மே லிப்ஸ்டிக்ஸ், ஐரோப்பா, அமெரிக்கா, இன்னும் பல நாடுகளுக்கும் ஏற்றுமதியாகின்றன.

# என்ன சேதி?

## சர்க்கரை இல்லாக் காப்பி!

நாட்டில் நிலவும் சர்க்கரைத் தட்டுப்பாடு நீங்க அதிமேதாவிகள் மிக அருமையான யோசனைகளைக் கூறி வருகிறார்கள். அரசுத் துறையில் நடந்து வரும் தொழிலகங்களின் அழகை நன்றாகக் கண்டும், கண்ணிருந்தும் குருடர்களாக இயங்கும் 257 பாராளுமன்ற உறுப்பினர்கள் சர்க்கரை ஆலைகளை யெல்லாம் தேசிய மயமாக்கி விட வேண்டும் என்ற அற்புதமான யோசனையைத் தெரிவித்திருக்கிறார்கள்.

இன்னொரு அதிசாமர்த்தியமான யோசனை காங்கிரஸ் பாராளுமன்ற உறுப்பினர்கள் நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது. சர்க்கரை உற்பத்தி அனைத்தையுமே அரசு லெவி முறையில் ஏற்றுக்கொண்டு மக்களுக்கு விநியோகிக்க வேண்டும் என்பதுதான் அந்த மகத்தான கருத்து! சி. சுப்பிரமணியம் இதைக் கேட்டு அசந்தே போய் விட்டாராம்! அடடா! இப்போது லெவி முறையில் எழுபது சதம் சர்க்கரை உற்பத்தியை ஏற்று விநியோகிக்கும் போதே அதில் 30–40 சதம் எப்படியோ கள்ள மார்க்கெட்டுக்குப் போய் விடுகிறதே; நூறு சதம் உற்பத்தியையும் லெவி முறைக்குக் கீழ் கொணர்ந்தால் எப்படிச் சமாளிப்பது என்று புரியாததால் மதிப்புக்குரிய அங்கத்தினர்களின் மேலான யோசனையை ஏற்க மறுத்து விட்டாராம்.

இந்த யோசனைகளை யெல்லாம் தூக்கி அடிப்பதாக இருக்கிறது பிரதமர் இந்திரா அம்மையாரின் கருத்து! 'சர்க்கரையைக் குழந்தைகளுக்கு மட்டும் சேருங்கள். பெரியவர்கள் சர்க்கரை இல்லாமல் காப்பி ம. சாப்பிடுங்கள்' என்று பிரச்னை தீர மிகச் சுலபமான வழி கண்டுபிடித்துக் கூறி விட்டார்! த்சொ, த்சொ! யாருக்குத் தோன்றும்?

## விண்ணளாவும் விலைகள்!

டெஸ்ட் கிரிக்கெட்டுக்கு ஆட்டக்காரர்களைத் தேர்ந்தெடுப்பது ஒருபுறமிருக்கட்டும். முதலில் தேர்வாளர்களை ஒழுங்காகத் தேர்ந்தெடுங்கள் என்று கிரிக்கெட் நிர்வாகக் குழுவினருக்குக் கூறிக் கொள்கிறோம். நாளை டெஸ்டில் காப்டன் யார், ஆட்டக்காரர்கள் யார் என்பது முதல் நாள் இரவு வரை தீர்மானமாகாதிருப்பது தேர்வாளர்களின் திறமைக் குறைவு, ஒத்துழைப்பின்மை இவற்றைச் சுட்டிக் காட்டுவதுடன் தன்னம்பிக்கையுடன் கூடிய நல்ல ஆட்டத்துக்கும் வழி செய்யாது.

இந்தக் கிரிக்கெட் சீஸனில் லாயிட்டின் ரன்கள் ஏறும் வேகத்தில் டிக்கெட்டின் விலைகளும் உயர்ந்துள்ளன.

அதுமட்டுமா? மைதானத்தில் விற்கப்படும் உணவுப் பொருள்களின் விலைகளும் காளிசரண் அடித்த ஸிக்ஸர் போல் விண்ணளாவுகின்றன. ஒரு கூல்டிரிங் நாலு ரூபாயாம். மதியச் சாப்பாடு பொட்டலம் எட்டு ரூபாயாம், (2 பூரி) டில்லியில். சத்தியாக்கிரஹமே செய்யப் போவதாக ஒரு பிரமுகர் மிரட்டியிருக்கிறார். பாவம், ரசிகர்களின் கிரிக்கெட் காதல் இத்தனைக்கும் ஈடு கொடுக்கிறது.

## நோயாளிகளின் தவிப்பு

சென்னையில் நடந்தது போல் திருச்சி மருத்துவ மனையிலும் சஸ்திர சிகிச்சைக்குப் பிறகு டெடனஸ் நோய் பலருக்குக் கண்டதால் ஆபரேஷன் தியேட்டரை இழுத்து மூடி விட்டார்கள். இதனால் சஸ்திர சிகிச்சை பெற வேண்டிய பலர் வியாதியின் கடுமையைத் தணித்துக் கொள்ள முடியாது தவிக்கிறார்கள். அசுத்தச் சூழலில் ஆபரேஷனுக்குப் பிறகு

ராஜாஜி சிந்தனை

### ஜனநாயகப் பாதையில் முட்டுக்கட்டை

பொதுமக்கள் அபிப்பிராயம் வலுவடைந்திருப்பதை உணர்ந்து, ஆட்சியில் உள்ள கட்சி தானாகவே முன்வந்து பெர்மிட் லைசென்ஸ் கோட்டாக்களை நிர்வகிக்கும் பொறுப்பை ஒரு சுதந்திரக் குழுவினிடம் ஒப்படைத்துவிட வேண்டும். சட்டபூர்வமான தார்மீகச் சுதந்திரம் இந்தக் குழுவுக்கு இருக்க வேண்டும். இதைச் செய்தாலொழிய ஜனநாயகப் பாதையில் உள்ள முட்டுக்கட்டையை நீக்கியதாகாது.

மக்களும் அவர்களின் குரலாக இயங்கும் பத்திரிகைகளும் பேராதரவு தரும் இந்தக் கருத்தை ஆளும் கட்சி ஏற்காது போனால் அரசியல் சாஸனத்துக்குப் புறம்பான நடவடிக்கைகளில்கூட நாம் ஈடுபட நேரலாம். பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராகக் காந்திஜி பரிசோதித்துப் பார்த்து வெற்றி கண்ட ஒத்துழையாமை இயக்கம் போன்ற முறைகளைக் கையாள வேண்டிய நிர்ப்பந்தம் நமக்கு ஏற்படலாம். சுதந்திர நாட்டில் சாதாரணமாக யாரும் இது போன்ற நடவடிக்கைகள் பற்றிச் சிந்திக்கமாட்டார்கள். அரசியல் சட்டத்துக்கு உட்பட்டே நடந்துகொள்ள நாம் கடமைப்பட்டுள்ளோம். ஆனால் ஜனநாயகப் பாதையில் முட்டுக்கட்டை போட நாம் அனுமதித்துவிட்டதால் இப்போது இதுபற்றித் தீவிரமாக யோசிக்க வேண்டியவர்களாகிறோம். ஏனெனில், ஜனநாயகத்தின் ஜீவன் நீதித் துறையோ அல்லது அரசியல் சட்டமோகூட அறியாதவாறு மடிந்து போவதை நாம் விரும்பவில்லை.

ஸ்வராஜ்யா, மார்ச் 27, 1965

டெடனஸ் கண்டு இறப்பதை விட நோய் காரணமாக இறந்து விடுவதே மேல் என்று கூட நோயாளிகள் நினைக்கலாம். ஆனால் அணுகுண்டு வெடித்தோம்; விஞ்ஞான சாதனை புரிந்தோம் என்று மார்தட்டிக்கொள்கிற பாரதம், ஆபரேஷன் தியேட்டரைச் சுத்தமாக வைத்துக் கொள்ளும் தகுதி கூடப் பெறவில்லை என்பது பெருத்த அவமானம். ஏனோ தானோ மனப்பான்மை மத்திய மந்திரிசபை முதல் கிரிக்கெட் தேர்வுக்குழு வரை எல்லா இடங்களிலும் ஊடுருவி விட்ட பின்னர் மருத்துவ மனைகள் மட்டும் எப்படி விதிவிலக்காக முடியும்?

## கஸ்தூரி கோபாலன்

ஒரு பத்திரிகை தோன்றி எத்தனை ஆண்டுகள் ஆகியிருந்தாலும் சரி, ஒரு குழந்தையை வளர்ப்பது போல் அதனைக் கண்ணும் கருத்துமாய்க் கவனித்து வர வேண்டும். இல்லாத போனால் ஆபத்துத்தான். அந்த முறையில் ஹிந்து பத்திரிகையைத் தனிப் பெரும் கௌரவமும் கண்ணியமும் மிக்க பத்திரிகையாக வளர்த்ததுடன் விற்பனை எண்ணிக்கையிலும் உயர்ந்து நிற்கச்செய்த பெருமை அதன் ஸ்தாபக ஆசிரியர் கஸ்தூரிரங்க அய்யங்காருக்கும் உண்டு. அவரது இரு புதல்வர்களுக்கும் உண்டு. கஸ்தூரி ரங்க அய்யங்காரின் புதல்வரும் காலஞ்சென்ற கஸ்தூரி ஸ்ரீனிவாசனின் இளைய சகோதரருமான திரு கஸ்தூரி கோபாலன் அண்மையில் வைகுண்ட பதவியடைந்து விட்டார். ஸ்ரீ கோபாலன் ஹிந்து பத்திரிகையின் விளையாட்டுச் செய்திகள் அடங்கிய பக்கங்களில் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டு அந்தப் பகுதிக்காகவே ஹிந்துவைப் பலர் வாங்குமாறு செய்தார். இறை உணர்வு ஊட்டும் விஷயமாக ஏதாவது செய்தி பத்திரிகையில் நாள்தோறும் வர வேண்டும் என்பதிலும் கருத்தாயிருந்தார்.



இந்த அம்சங்கள் ஹிந்து பத்திரிகையின் பிரசுரகர்த்தராய் விளங்கிய ஸ்ரீ கோபாலனைச் சதா நமக்கு நினைவூட்டுவதுடன் பத்திரிகைக்கும் தொடர்ந்து பொலிவூட்டி வரும்.

## பாலில் விஷம்!

அரசுத்துறைதான் கதிமோட்சமளிக்கும் என்று ஆணவப் பிடிவாதத்துடன் பிதற்றுபவர்கள் டில்லி பால் திட்டம் நடக்கிற விதத்தை ஆராய்ந்த நிபுணரின் அறிக்கையைப் படிக்கவேணும்.

பாலைப் பாதுகாக்க அதனைச் சில்லிடச் செய்ய வேண்டுமேயன்றி உறைந்து போக அனுமதிக்கக் கூடாது. அடிப்படை விஷயம் இது. ஆனால் டில்லி பால் திட்டத்தில் பால் உறைந்து போவது மட்டுமல்ல, அப்படி உறையும் போது அதில் சிக்கிக் கொண்டு தவளைகளும் கரப்பான் பூச்சிகளும் பிராணனை விடுகின்றன! பாலாடை (கிரீம்) புளித்துப் போனால் அதில் சோடியம் பைகார்பனேட் சேர்த்துப் புளிப்பு நீக்கி விடுவார்கள்! இந்த ரசாயனப் பொருள் பாத்திரங்களைச் சுத்தப்படுத்தப் பயன்படுவது! பால் உற்பத்தி பதப்படுத்தலுக்காக அயல்நாடுகளிலிருந்து தருவிக்கப்பட்ட லட்சக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள உபகரணங்கள், ஒன்று, காணாமல் போய்விட்டன, அல்லது சரிவரக் கையாளப்படாமல் பாழாகி விட்டன என்று அறிக்கை சொல்கிறது.

இந்த அறிக்கை டில்லி பால் திட்டம் பற்றி இரண்டாவது தடவையாகச் சமர்ப்பிக்கப்படுவது. முதல் அறிக்கையே அரசுக்குப் பால் வியாபாரம் வேண்டாம், தனியாரிடம் ஒப்படைத்து விடலாம் என்று சிபாரிசு செய்தது. அதன் மீது எந்தவித நடவடிக்கையும் எடுக்காத அரசுக்கு இந்த இரண்டாவது அறிக்கையும் அதே யோசனையை மீண்டும் வலியுறுத்திக் கூறி இருக்கிறது. இப்போதாவது அசைந்து கொடுக்குமா அரசு அல்லது கரப்பான் பூச்சி எஸென்ஸ் இறங்கிய பாலைத்தான் சாப்பிட வேண்டும் என்பது டில்லி மக்கள் தலையெழுத்தா, நாம் அறியோம்!

## ஸ்ரீமதி சுசேதா

ஸ்ரீமதி சுசேதா கிருபளானி காலமான செய்தி மிகுந்த துயரம் தருவதாகும். ஸ்ரீமதி சுசேதா, தமது கணவர் ஆசார்ய கிருபளானி மிகுந்த நோய்வாய்ப்பட்டிருந்ததால், அவருக்குப் பணிவிடை செய்தே களைத்துப் போய் மரணமடைந்தார் என்ற செய்தி இன்னும் உள்ளத்தை உருக்குவதாகும். ஸ்ரீமதி சுசேதா வங்காளி. கிருபளானி சிந்து மொழி பேசுபவர். காசி இந்து சர்வகலாசாலையில் ஆசார்ய கிருபளானி, சரித்திரப் பேராசிரியராகச் சேர்ந்த போது, ஸ்ரீமதி சுசேதா அதே கல்லூரியில் சரித்திர மாணவியாக இருந்தார். பின்னர் இருவரும் திருமணம் புரிந்து கொண்டனர். இருவருமே காந்திய வழியில் நாட்டுக்கு அரிய சேவை செய்து காந்தி மகானின் பேரன்பைப் பெற்றனர். 1946–47-ல் மொழிக் கலவரங்கள் ஏற்பட்ட போது, கையில் இரகசியமாக விஷப்புட்டியை வைத்துக் கொண்டே கலவரப் பகுதிகளில் சுசேதா சென்று அமைதியை நிலைநிறுத்த அரிய பணி மேற்கொள்ளச் செல்வதுண்டாம். எவனாவது கயவன், மானபங்கப் படுத்த வருவானாகில், அவன் அதில் வெற்றி பெறுமுன் தம் உயிரை மாய்த்துக் கொள்வது என்ற திடசித்தத்துடன் அரும்பணியாற்றினார். டில்லி மக்கள் சபை அங்கத்தினராகவும், உத்தரப் பிரதேச முதன் மந்திரியாகவும் பணியாற்றியிருக்கிறார் சுதந்திர இந்தியாவில்.



காந்தியவாதிகளில் ஓர் அரிய பெண்மணியைப் பாரதநாட்டுத் தாய்க்குலம் இழந்து விட்டது.

# இயற்கை உங்களுக்கு அளித்துள்ளது எழில்மிகு கேசம். அதனை அவ்வண்ணமே வைத்திருப்பீர் ஹேலோ கேச பராமரிப்புமூலம்

HSR.G.I.TH

**ஹேலோ ஷாம்பூக்கள் மட்டுமே சீரான, சிறந்த உத்தியின்படி தயாரிக்கப்படுகின்றன—உங்கள் கேசத்தின் பராமரிப்பிற்கெனவே**

**ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ:**
இந்த விசேஷ ஷாம்பூவை உபயோகித்து, உங்கள் கேசம் எவ்வளவு மெருதென்றும், மிருதுவாகவும் இருக்கக் கூடும் என்பதைக் கண்டு கொள்ளுங்கள்.

**ஹேலோ எக் ஷாம்பூ:**
விசேஷ போஷாக்கு மிக்க இந்த ஷாம்பூவில் உள்ள வளமிக்க முட்டைப் பதார்த்தின் பயனுக உங்கள் கேசம் கட்டுக்-கோப்புடன், கவர்ச்சியாகத் திகழ்கிறது.



**ஹேலோ லெமன்— ஃப்ரெஷ் ஷாம்பூ:**
உங்கள் கேசத்திற்கு இயற்கையான தூய்மையான பளபளப்புத் தருகிறது.

**ஹேலோ கான்ஸென்-ட்ரேட் ஷாம்பூ:**
[illegible] நுரைத்து உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கோப்புடனும் வைத்திருக்க சிறந்த உதவும்.

**இயற்கை ஆரோக்கியத்துடன் கூடிய கேசத்திற்கு—இன்றே உபயோகிக்கத் தொடங்குவீர் ஹேலோ**

# மகாலக்ஷ்மி

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்

கம்பன்ன உடையாரின் பத்தினி ஒருத்தி கங்காதேவி என்று. அவளும் அவர் படையெடுத்த இடங்களுக்கெல்லாம் பின்னேடு போயிருக்கிறள். போனது மட்டுமில்லை. ஸம்ஸ்கிருதத்தில் மகா பண்டிதையான அவள் ஆங்காங்கே நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் திரும்பி ஊர் வந்து சேருகிறவரையில், பரம ஸ்வாரஸ்யமாக, காவிய நயத்தோடுகூட எழுதியிருக்கிறள். காளிதாஸன் கூடத் தோற்றுப்போய்விடுவான் என்கிறமாதிரி நுணுக்கமான திருஷ்டியோடு கவி சமத்காரத்தோடு, 'கங்காதேவி மதுரா விஜயம்' என்று எழுதியிருக்கிறள். எபிக்ராஃபிகல் டிபார்ட்மெண்டில் அதை அச்சுப் போட்டிருக்கிறர்கள். அறுநூறு வருஷங்களுக்கு முன் ஒரு ஸ்திரீ இப்படிப்பட்ட பிரயாண இலக்கியம் எழுதினது நமக்கெல்லாம் பெருமை.

மகாலக்ஷ்மியின் அனுக்கிரகத்தால் விஜயநகர ஸாம்ராஜ்யம் பிறந்தது. பராசக்தியின் அநுக்கிரகத்தால் கம்பன்ன உடையார் யுத்தங்களில் வெற்றி பெற்று அதை விஸ்தரித்து நிலைப்படுத்தினர். ஸரஸ்வதியின் அநுக்கிரகத்தால் இந்த திக்விஜய நூல் வந்தது.

நடுவில் ஒரு நாற்பது ஐம்பது வருஷ காலம் பிற மதத்தினரால் வீணுகப் போன தேசத்தில் மறுபடியும் வேதம், கோயில், தர்மம் எல்லாம் நிலைக்கும்படி செய்து ஜனங்களுக்குப் பரமோபகாரம் செய்தார் கம்பன்ன உடையார். இந்த விஜயநகர வம்சத்தில்தான் பிற்பாடு உலகமே கொண்டாடுகிற கிருஷ்ணதேவராயர் வந்தார். இவர்கள் அத்தனை பெரும்செய்கை காரியத்துக்கெல்லாம் வித்து வித்யாரண்யரிடம்தான் இருந்தது. ராஜ்யத்தை ஸ்தாபித்தது, விஸ்தரித்தது, அதைப் பல பகுதிகளாகப் பிரித்துப் பல பிரதிநிதிகளைக் கொண்டு ஆட்சி நடத்தியது எல்லாவற்றுக்கும் வித்யாரண்யரே மூலபுருஷர்.

வேத தர்மங்களை மறுபடியும் உச்ச நிலைக்குக் கொண்டு வருவதற்கு வழியாகவே துருக்கரை அகற்றி, ஹிந்து ராஜ்யம் அமைக்க அவர் வழிகோலினர். இப்போது இந்த தர்ம ரக்ஷணத்தைத் தாமே மேற்கொண்டார். ஆதி சங்கர பகவத் பாதர்களின் அத்வைத ஸம்பிரதாயத்தை மறுபடியும் ஜொலிக்கச் செய்துவிட்டால் வேத தர்மங்கள் எல்லாம் புனர்ஜீவனம் பெற்றுவிடும் என்று நிர்மானித்தார். அதனால் கர்நாடக, ஆந்திர தேசங்களிலிருந்த பழைய சங்கர மடங்களைப் புதுக் களையோடு பிரகாசிக்கிற மாதிரி உத்தாரணம் செய்தார். சில புதிய மடங்களையும் ஸ்தாபித்தார்.

ஜனங்களின் நல்வாழ்வுக்கு சஸ்திரம், சாஸ்திரம் என்கிற இரண்டும் தேவையாயிருக்கின்றன. சஸ்திரம் என்றல் ஆயுதம். விரோதி ராஜ்யங்களால் தீமை ஏற்படாமல் காப்பாற்றிக் கொள்ள சஸ்திரம் வேண்டியிருக்கிறது. நம்மை நாமே கெடுத்துக்கொள்ளாமல், ஆத்மாவை ரக்ஷித்துக் கொள்வதற்கு சாஸ்திரம் வேண்டியிருக்கிறது. வித்யாரண்யர் ராஜ்ய ஸ்தாபனத்திஞல் மறைமுகமாக சஸ்திரப் பிரயோகம் செய்தும், ஸ்ரீ சங்கர மடங்களின் புனருத்தாரணத்தால் தாமே நேராக சாஸ்திரப் பிரயோகம் செய்தும், ஹிந்து சமூகம் முழுவதையும் காப்பாற்றிவிட்டார். அவருடைய பஞ்சதச ப்ரகரணம், ஜீவன் முக்தி விவேகம் முதலான இரத்தங்கள் ஞானத்தைக் கொடுக்கக் கூடியவை. மடத்தை ஸ்தாபித்தல், ஆலய புனருத்தாரணம் செய்தல் ஆகியவற்றல் பக்தியை வளர்த்தார். வேத பாஷ்யத்தால் கர்மத்தை நிலைநாட்டினர். அவர் செய்த இத்தனை பரமோபகாரத்துக்கும் சக்தி தந்தது லக்ஷ்மீ கடாக்ஷத்தால் அவர் பெற்ற நவநிதிதான்.

பணம் சம்பாதித்துக் கொள்வதை விட அதைக் கொடுக்கிற மனப்பான்மைதான் பெரிய லக்ஷ்மி. இந்த மனோபாவத்தையும் மகாலக்ஷ்மி அநுக்கிரகம் செய்வாள். ஏழைப் பிராமணர்களின் பொருட்டு அவளைச் செல்வத்துக்கு அதிதேவதையாக வைத்துக் கனக மழை பொழியும்படி வேண்டிக்கொண்ட சங்கரர், இதே ஸ்துதியில் தம்பொருட்டு அவளைப் பிரார்த்திக்கிறபோது அவளைப் பணத்துக்கான தேவதையாக மட்டும் நினைக்கவில்லை; மன மாசுகளையெல்லாம் நீக்குகிற ஞானம் பிகையாக வைத்துப் பிரார்த்திக்கிறர். ('ஸம்பத்கராணி' என்கிற ச்லோகம்.)

வைஷ்ணவர்கள் விஷ்ணுவைத் தகப்பனர் என்று சொல்லாமல் பெருமாள் என்றே சொன்னுலும், மகாலக்ஷ்மியைத் தாயார், தாயார் என்றே சொல்வார்கள். அவள்தான் ஸ்ரீமாதாவான பராசக்தி. ஆசார்யாளும் இங்கு "மாதா" என்று அழைத்து, "உன்னை நமஸ்காரம் பண்ணிவிட்டால் போதும்; அந்த நமஸ்காரங்கள் சம்பத்து, சகல இந்திரிய சந்தோஷங்கள், ஸாம்ராஜ்யம் எல்லாம் தந்துவிடும். ஆனல் இதெல்லாம் எனக்கு வேண்டாம். எனக்கு உன்னிடமிருந்து ஒரே ஒரு செல்வம்தான் வேண்டும். என் துரிதங்கள் – பாவங்கள் – எல்லாவற்றையும் கல்லி எறிவதற்கும் உன்னை நமஸ்கரிப்பதே சாதனமாகிறது. செல்வ தேவதையான நீ எனக்குத் தருகிற செல்வம் இந்த நமஸ்காரம்தான். இது என்னை விட்டு நீங்காமல் இருக்கட்டும்" என்கிறர்.

எல்லாரும் துராசைகளில்லாமல் ஜீவனோபாயம் நடத்துவதற்கு மகாலக்ஷ்மியை உபாஸிக்க வேண்டும். ஆசாரியாள், வித்யாரண்யாள், ஸ்ரீ தேசிகன் மாதிரி பரோபகாரமாக அவளைத் துதிக்க வேண்டும். எந்த செல்வம் வந்தாலும், வராவிட்டாலும், நம்மிடம் பாபமே சேராமல் நிர்மலமாக இருக்கிற செல்வத்தை விரும்பி அவளை நமஸ்கரிப்போம்.



# பால் (கோபம்) பொங்குகிறது!

அநாமதேயம்

கடைசியில் என் [illegible] தலையிலும் கைவைத்து விட்டார்களே!

'என் தலை' என்னும்போது தமிழ்நாட்டில் உள்ள பால் மணம் மாறாத பல லட்சக் கணக்கான குழந்தைகளின் தலைகளைப் பற்றிச் சொல்கிறேன்.

குழந்தைகளுக்குத் தாய்ப் பால் சாதாரணமாக நான்கு ஐந்து மாத காலம் வரைக்குந்தான் கொடுக்க முடியும். பிறகு என்னைப் புகட்டுகிறார்கள்.

சுத்தமான பசும் பால் கிடைப்பது மிகவும் கஷ்டமாகிக் கொண்டு வந்தது. சென்னையில் மாடுகளை வீட்டு வாசலில் கொண்டு வந்து கட்டி, பால் கறக்கும் குவளையை ஒரு சுற்றுச் சுற்றிக் காட்டிவிட்டுக் கறப்பார்கள். என்னைக் கறப்பவர்களில் பெரும்பாலோர், "பத்து ஜோடிக் கண்கள் உற்றுக் கவனித்துக் கொண்டிருக்கும் போது கறக்கும் பாலில் தண்ணீரைக் கலந்து விடுவது எப்படி?" என்ற பரீட்சையில் டிஸ்டிங்ஷனோடு தேறியவர்கள்.

நாளடைவில் மேல்நாடுகளிலிருந்து 'பால் மாவு' டின்களில் வரத் தொடங்கியது. அதைக் கரைத்துக் குழந்தைகளுக்குப் புகட்டினர்.

ஆனால், அந்த மாவு டின்களுக்கும் கிராக்கி ஏற்பட்டு, அவற்றைக் கறுப்பு மார்க்கெட்டில் வாங்கும்படியாயிற்று. சாதாரண மக்களால் அந்த மார்க்கெட்டைத் தேடிப் போய் வாங்க முடியுமா? அவர்கள் தங்கள் குழந்தைகளுக்கு எப்படி என்னை வாங்கிக் கொடுப்பதென்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தபோது சென்னைப் பகுதியில் மாதவரத்தில் பால் பண்ணை ஏற்பட்டது. காங்கிரஸ் நிர்வாக காலத்தில், பால்பண்ணையை நன்றாக நன்கு நடத்துவதற்காக அதிகாரிகள் டென்மார்க் நார்வே ஸ்வீடன் ஆகிய நாடுகளுக்குப் பயிற்சி பெற அனுப்பப் பட்டார்கள். அவர்கள் பயிற்சி பெற்றுத் திரும்பி வந்ததும் ஒருவர் நெய்வேலி கரிச் சுரங்கக் காரியாலயத் தலைவராகச் சென்றாராம். இன்னொருவர் மீன் இலாகாவுக்கோ புதை பொருள் ஆராய்ச்சி இலாகாவுக்கோ அனுப்பப்பட்டாராம்.

ஆனாலும் என்னை அநேகமாக ஒழுங்காகவும், சுத்தமாகவும் கொடுத்து வந்தார்கள். பசும் பால் எருமைப் பால் இரண்டும் தனித் தனியாக அரை லிட்டர் பால் புட்டிகளில் விற்கப் பட்டு வந்தன. சாதாரண மக்கள் இந்தப் பாலைத் துணிந்து தங்கள் குழந்தைகளுக்குக் கொடுத்து வந்தார்கள். சிறிது காலத்துக்குப் பிறகு 'டோன்ட்' மில்க் அதாவது பதப்படுத்தப்பட்ட பால் விற்கப்பட்டது. இதன் விலை முன்னதைவிடச் சிறிது குறைவு. அந்தப் பாலில் ஓரளவு பால் பவுடரும் கலந்திருக்கும்.



கெட்டியான பால், கள்ளிச் சொட்டுப் போன்ற பால் என்பார்கள். டில்லி எருமை மாட்டுப் பாலைப் பற்பசை போன்று டியூப்களில் அடைத்து விடலாமென் பார்கள். உண்மையில் என்னில் சுமார் நூற்றுக்கு 85 சதம் தண்ணீர். பாக்கி புரோட்டீன், கொழுப்பு, சர்க்கரை முதலிய சத்துக்கள்.

காலச் சக்கரம் இடமிருந்து வலப்புறம் சுழல ஆரம்பித்தது. என் விலை அரை லிட்டர் பாட்டில் 40 பைசாவாக இருந்தது. 50, 60 என்று ஆகி, 70க்கு உயர்ந்தது.

என்னைத் தயாரிப்பதனால் ஜனநாயக சோஷலிஸக் கொள்கையைக் கடைப்பிடிக்கிறார்கள். எருமைப் பால், பசும் பால் பதப்படுத்தப் பட்ட பால் என்ற வித்தியாசமில்லாமல் பதப்படுத்தப்பட்ட பால் ரகம் மட்டும் தயாரித்து விற்கிறார்கள்.

இந்த மாதத்திலிருந்து திடீரென்று அரை லிட்டர் பால் விலையை 70 பைசாவிலிருந்து 90 பைசாவாக உயர்த்தி விட்டிருக்கிறார்கள். தங்கள் குழந்தைகளுக்காக மிகவும் சிரமப் பட்டுக் காலை ஒரு பாட்டில் மாலை ஒரு பாட்டில் வாங்கும் ஏழைகள் இனி மாதம் 12 ரூபாய் அதிகம் செலவழித்தாக வேண்டுமே! மனிதர்கள் 'நீராகார'த்துக்குப் பதில் காப்பி, தயிர், மோர் உபயோகிப்பதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. என் கவலை குழந்தைகளைப் பற்றியது.

அரசாங்கக் குடும்பக் கட்டுப்பாடு பிரசார சுவரொட்டிகளில் "என்னென்ன வெற்றிகள் கண்டோம்!" என்று ஆரம்பித்து ஒரு ஜாபிதா தரப்பட்டிருக்கிறது. சமீப கால வெற்றிகளையும் சேர்த்துக்கொள்ளட்டுமே:

"அரிசி படி 7 ரூபாய்க்கு விற்கச் செய்தோம்.

"பால் 1 லிட்டர் 1–40 லிருந்து 1–80 ஆக உயரச் செய்தோம்."



# பாதுகாப்பிற்கு ஒரு பூட்டு உள்ளதெனில் அது நவ-தால் ஒன்றே ஒன்றுதான்!






நம்பிக்கையானது. அதனால்தான் பாங்குகளும் தொழிற்சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோகிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்பு முறையில் வெட்டப்பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற்கேற்ற முறையில் செய்யப்பட்டது நவ-தால். பித்தளை, எஃகினாலான இரட்டைக் கூடு அதை மிகமிக உறுதியாக்குகிறது. தயாரிப்பவர்கள்: கோத்ரெஜ்—பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்பதில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடையவர்கள்.

4 சைஸ்கள்:
40 mm (5 லீவர்கள்)
50 mm (6 லீவர்கள்)
65 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

# நவ-தால்

Godrej

கோத்ரெஜ்

எப்போதும் நங்கூரம் மார்க் பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

# கண்ணியமிக்க காரோட்டி

**சோவியத் ரஷ்யாவில் டாக்சி டிரைவர்கள் இனாம் வாங்கமாட்டார்கள் என்று பெருமையாகக் கூறுகிறார்கள்.**
**அந்தப் ''பெருமையை''ப் பற்றிய இந்த வேடிக்கைக் கதையை எழுதியவர் ரஷிய நகைச்சுவை எழுத்தாளர் கிரிகோரி கோரின்.**



நான் கையைக் காட்டி அந்த டாக்சியை நிறுத்தினேன்.

''அவசரமாக சமோதனாயா சதுக்கத்துக்குச் செல்ல வேண்டும்.''

''ஏறுங்கள்....'' டிரைவர் கதவைத் திறந்து விட்டார். வசதியாக அமர்ந்தேன். டிரைவர் மீட்டரைப் போட்டு விட்டு டாக்சியை ஸ்டார்ட் செய்தார்.

ஐந்தே நிமிடங்களில் நான் வர வேண்டிய இடத்துக்கு வந்து சேர்ந்து விட்டேன். நாற்பத்தொன்பது கோபெக்குகளை மீட்டர் காட்டியது. நான் ஒரு ரூபிளை டிரைவரிடம் நீட்டினேன்.

''மன்னிக்கவும். என்னிடம் சில்லறை இல்லை'' என்று கண்ணியமாகச் சொன்னார் கார் ஓட்டி.

ஐம்பது கோபெக் நாணயத்தைக் கொடுத்தேன்.

''என்னிடம் ஒரு கோபெக்குக் கூட மீதி தர இல்லையே?'' டிரைவரின் குரலில் வருத்தம் தொனித்தது.

''பாதகமில்லை. வைத்துக் கொள்.''

''வேண்டாம் ... வேண்டாம் .. நான் இனாம் பெறுவதே இல்லை'' என்று டிரைவர் உறுதியாக மறுத்தார்.

''இனாம் வாங்காத உங்கள் செய்கை பாராட்டத் தகுந்தது. ஆனால் இப்பொழுது சில்லறைக்கு என்ன செய்வது?'' என் இக்கட்டான நிலையைக் காட்டினேன்.

''இந்தத் தெருவின் முனையில் எனக்குத் தெரிந்த சிறுகடை ஒன்று இருக்கிறது. அது இப்பொழுது திறந்திருக்கும். அங்கே மாற்றிக் கொள்ளலாம்'' என்று சொல்லிக் கொண்டே டாக்சியைக் கிளப்பினார் டிரைவர்.

என் அதிர்ஷ்டம். அந்தத் தெருவில் அதற்குமேல் நேராகப் போக முடியாது. ஒன்-வே டிராபிக். இடது பக்கம் சந்தில் திரும்பி, வலது பக்கம் வீதியில் திரும்பி, தெரு முனைக்கு வந்தேன். அந்தச் சிறுகடை மூடிக் கிடந்தது. டாக்சி மீட்டரோ தொண்ணூற்றேழு கோபெக்குகளைக் காட்டியது.

''உங்களிடமோ சில்லறை இல்லை. நானோ இனாம் பெற மாட்டேன். என்ன செய்வது...?'' டாக்சி டிரைவரின் குரலில் வருத்தம் அலை அலையாகத் தொனித்தது.

''பாதகமில்லை டிரைவர் டாக்சியை எடு... ஒரு ரூபிள் வந்ததும் இறங்கிக் கொள்கிறேன்.''

டாக்சி கொஞ்ச தூரம் ஓடியதும் மீட்டர் ஒரு ரூபிள் காட்டியது.

''டாக்சியை ... நிறுத்து ... நிறுத்து...''

''சாரி ... சார் ... டாக்சியை இங்கெல்லாம் நிறுத்தக் கூடாது. அதோ.... அந்தப் போர்டைப் பாருங்கள்!'' டிரைவர் காட்டிய திக்கில் பார்த்தேன். நோ பார்க்கிங்.

''அப்போ ... மீட்டரை நிறுத்தி விடு'' நான் கத்தினேன்.

''சார் ... சவாரி போகும்போது மீட்டரைப் போடாமல் போவது சட்டப்படி குற்றம் சார் ...'' டிரைவர் பேசிக் கொண்டேயிருந்தார். டாக்சி ஓடிக் கொண்டேயிருந்தது. மீட்டரும் ஓடிக் கொண்டேயிருந்தது.

நோ பார்க்கிங் தாண்டி டாக்சியை நிறுத்தியபோது மீட்டர் ஒரு ரூபிள் இருபது கோபெக்குகளைக் காட்டியது.

நான் பொறுமை யிழந்தேன்.

''சார்! .... வருத்தப் படாதீங்க சார். கொஞ்ச தூரத்தில் ஒரு போஸ்டாபீஸ் இருக்கு. அங்கே சில்லறை மாற்றிக் கொள்ளலாம்!'' டிரைவர் ஆறுதல் கூறினார்.

மீண்டும் டாக்சி ஓடியது. மீட்டரும் ஓடியது. என்ன வேதனை. அந்தப் போஸ்டாபீசும் லஞ்ச் ஹவருக்காக மூடப்பட்டிருந்தது. நான் ஆத்திரம் குமுற மீட்டரைப் பார்த்தேன். மூன்று ரூபிள்கள் ... அப்பாடா, விட்டது சனியன். மூன்று ரூபிள் நோட்டுகளை டிரைவரின் கையில் திணித்து விட்டு இறங்கினேன்.

டாக்சி டிரைவர் மீட்டரை நிறுத்தினார். ''சார்!... உங்களுக்கு வீண் செலவு ஏற்பட்டு விட்டது. என்ன செய்வது ... நான் டிப்ஸ் வாங்குவதே யில்லை...''

''அது சரி. நான் இப்பொழுது சமோதனாயா சதுக்கத்துக்கு எப்படிப் போவது?'' விரக்தியோடு வினவினேன்.

''நான் டிராப் பண்ணறேன்... சார்... ஏறுங்கள்!'' டாக்சியை ஸ்டார்ட் செய்வதற்கு முன் மீட்டரைப் போட்டார் டிரைவர். மீண்டும் டாக்சி ஓடியது. மீட்டரும் ஓடிக் கொண்டிருந்தது.

ஐந்து நிமிடங்களுக்கெல்லாம் நான் வர வேண்டிய இடத்துக்கு வந்து சேர்ந்து விட்டேன். மீட்டரைப் பார்த்தேன். நாற்பத்தொன்பது கோபெக்குகள்! எனக்கு 'ஓ' வென்று அழ வேண்டும் போலிருந்தது.

— விஜயா வேணுகோபாலன்

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய காலிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பநவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மாக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராமம், நாக்தா (ம.பி.)



# அட்டைப்பட அணங்கும்..

திருமதி சித்ரா விசுவேசுவரன் ஒரு பி. ஏ. பட்டதாரி. சின்ன வயதிலிருந்தே பரதக் கலையில் ஈடுபாடு பெரிதும் கொண்டிருந்த சித்ரா, கல்கத்தாவில் உள்ள தஞ்சாவூர் ஸ்கூலில், திருமதி டி. ஏ. ராஜலக்ஷ்மியிடம் நடனக்கலை பயின்றார். பிறகு, கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு வந்து பிரசித்திபெற்ற நடன ஆசிரியரான வழுவூர் ராமையாப்பிள்ளை அவர்களிடம் நடனம் பயின்றார்.

நடனக் கலையில் மட்டும் அல்லாமல், அதன் துணைக் கலைகளான சிற்பக் கலை, இசை, சித்திரம் முதலிய அருங் கலைகள் பலவற்றிலும் தேர்ச்சி பெற்றவர் சித்ரா. மேலும், இந்தப் பல் கலை ஆர்வம் மணிபுரி, கதக் முதலிய வட இந்திய நடனக் கலைகளில் தேர்ச்சி பெற இவரை ஊக்குவித்துள்ளது.

சித்ராவின் கணவர் திரு விசுவேசுவரனும் ஒரு கலைஞர். மேற்கத்திய இசை பயின்றுள்ள இவர், கிடார் வாத்தியம் இசைப்பதில் தேர்ச்சியுள்ளவர். வீணையையும் வளமாகக் கையாள்வார். கலைச் செல்வியான தம் துணைவியின் கலையார்வத்துக்கு ஒரு தூண்டுகோலாக அமைந்து அவரது பேருக்கும், புகழுக்கும் உறுதுணையாயிருக்கிறார்.

மேலட்டை வண்ணப் படம்: ராஜாமணி

# ...அரங்கேறிய சிறுமிகளும்

பரத கலாஞ்சலியின் மாணவியான குமாரி சுமதியின் பரத நாட்டிய அரங்கேற்றம் கலைவாணர் அரங்கத்தில் கல்வி அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. ராகமாலிகையான 'சண்முக சப்தம்' சுமதியின் முகபாவங்களினால் ரசிகர்களைப் பரவசமுறச் செய்தது. யமுனா கல்யாணியில் அமைந்த ஜெயதேவரின் அஷ்டபதி விறுவிறுப்பாயிருந்தது. பரத கலாஞ்சலியைச் சேர்ந்த ஸ்ரீ வி. பி. தனஞ்செயனின் நட்டுவாங்கம், ஸ்ரீமதி சாந்தா தனஞ்செயனின் இனிமையான பதங்களுடன் மிகவும் சிறப்பாயிருந்தது. குமாரி சுமதி வழக்கறிஞர் திரு எஸ். மீனாட்சிசுந்தரத்தின் புதல்வி.



திரு கே. ஆர். ஆராவமுதனின் புதல்வியும் திருமதி மாலதி சீனிவாசனின் மாணவியுமான செல்வி சித்ராவின் அரங்கேற்றம் திரு ஒய். ஜி. துரைசாமி அவர்களின் முன்னிலையில் சிறப்பாகச் சமீபத்தில் நடைபெற்றது. குமாரி சித்ராவின் பாவ பூர்வமான நிருத்த அபிநயங்கள் நன்றாயிருந்தன. காம்போதியில் அமைக்கப்பட்டிருந்த "ஆடும் தெய்வ"மும் மோகனத்தில் "என் பள்ளி கொண்டீரய்யா!"வும் ரசிகப் பெருமக்களின் கையொலி பெற்றன. மாலதி சீனிவாசனும் குமாரி விஜயலக்ஷ்மியும் பதங்களை அருமையாகப் பாடினார்.

திரு சங்கரநாராயணன் திருமதி ஹைமவதி தம்பதியின் புதல்வியான குமாரி சுபாவின் பரத நாட்டிய அரங்கேற்றம், அண்மையில் நீதிபதி எஸ். மகராஜன் அவர்கள் தலைமையில் அதி விமரிசையாக நடந்தேறியது. காலஞ்சென்ற கே. என். தண்டாயுதபாணி பிள்ளை அவர்களின் மாணவியான சுபாவின் நாட்டிய முத்திரைகளும், நிருத்த அபிநயங்களும் நல் வடிவங்களாய் இலங்கின. வர்ணம், ஜதிஸ்வரம், தில்லானாவோடு பதங்களுக்கேற்ற அபிநயங்கள் வெகு கச்சிதமாக அமைந்திருந்தன. "இடது பதம் தூக்கி" என்ற பாபநாசம் சிவனின் பதம் கமாஸ் ராகத்தில் கன கச்சிதமாகமைந்தது.

- காந்தன்





# பினகா ஃப்ளோரைட்* பற்பசை வலிதரும் சொத்தையையும் பற்சிதைவையும் தடுக்கிறது

## ஆகவே நீங்கள் அதை உபயோகிக்க வேண்டும்

பல் வைத்தியர்களும் ஆராய்ச்சி விஞ்ஞானிகளும் இதை சிபார்சிதம் செய்கின்றனர்

*"பற்சிதைவைக் காப்பதில் பெரும்பகுதி ஃப்ளோரைட் என்று நமக்கு இப்பொழுது தெரியும். பல் ஆரோக்கிய துறையில் விஞ்ஞான ஆராய்ச்சி தந்த ஒரு பெரும் சாதனை ஃப்ளோரைட்"—

"தி ஜெர்னல் ஆஃப் மெடிகல் கியூல் (தி மெடிஷன் & சர்ஜன் VIII 252-57 பிப். 1967)".

**பினகா ஃப்ளோரைடினால் பல்துலக்குங்கள் பற்களை உறுதியாக வைத்திருங்கள்**




பினகா டூத் பிரஷ்களிலுள்ள மழுக்கப்பட்ட முனைகள் ஈறுகளுக்கு ஊறு செய்யாது

CIBA

ULKA-CF-33 TH

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

முப்பத்துநான்காம் அத்தியாயம்

## இந்தப் பெண் யார்?

காஞ்சிமா நகரம் இதற்கு முன் எந்த நாளிலும் கண்டிராத அமைதியுடன் விளங்கிற்று. பெரிய பயங்கரமான புயல் அடித்து ஓய்ந்த பிறகு ஏற்படும் அமைதியை அது ஒத்திருந்தது. நகரவாசிகளின் மன நிலையும் அதற்கேற்றபடிதான் இருந்தது.

வாதாபிப் படைகள் தொண்டை நாட்டில் சொல்லொணாத அட்டூழியங்களைச் செய்து விட்டுப் பின்வாங்கிச் சென்றது பற்றியும், மணிமங்கலத்திலும் சூரமாரத்திலும் நடந்த போர்களைப் பற்றியும், காஞ்சிநகர்வாசிகளுக்கு அரைகுறையான விவரங்கள் கிடைத்திருந்தன. மகேந்திர பல்லவச் சக்கரவர்த்தி மணிமங்கலம் போர்க்களத்தில் அடைந்த காயங்களினால் யமன் உலகை எட்டிப் பார்த்துக் கொண்டிருப்பதும், அவரைப் பிழைப்பிக்க அரண்மனை வைத்தியர்கள் பிரம்மப் பிரயத்தனம் செய்து கொண்டிருப்பதும் காஞ்சி மக்களுக்குத் தெரிந்திருந்தபடியால், எந்த நிமிடத்திலும் அவர்கள், ''சக்கரவர்த்தி காலமானார்''. என்ற துக்கச் செய்தியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மணிமங்கலம் போர்க்களத்திலிருந்து திரும்பி வந்த வீரர் சிலரின் மூலம் ஆயனருடைய கால் முறிந்த செய்தியையும், சிவகாமி சளுக்



கர்களால் சிறைப்பிடித்துக் கொண்டு போகப்பட்ட விவரத்தையும் காஞ்சி மக்கள் கேள்விப்பட்டிருந்தார்கள். இந்தச் சம்பவம் அவர்களுக்கு எல்லாவற்றிலும் அதிக வேதனையை அளித்திருந்ததுடன் மகேந்திர பல்லவரிடம் அவர்களுக்கு இருந்த மரியாதையைப் பெரிதும் குறைத்திருந்தது.

இத்தகைய காரணங்களினால் காஞ்சிமாநகரம் களையற்றுக் கலகலப்பற்றுச் சோபிதமில்லாமல் அசாதாரணமான அமைதி குடிகொண்ட நகரமாய் விளங்கிற்று.

நகரத்திலேயே இப்படி இருந்தது என்றால், அரண்மனைக்குள்ளே கேட்க வேண்டியதில்லை. புவனமாதேவி மகேந்திர பல்லவரை மணந்து காஞ்சி அரண்மனைக்குள்ளே கால் வைத்த நாளிலிருந்து, அந்த அரண்மனை ஒரு காலத்திலும் இம்மாதிரி கலகலப்பற்றும் பிரகாச



மில்லாமலும் பேய் குடிகொண்ட பழைய மாளிகையைப் போலத் தோற்றமளித்தது கிடையாது.

காஞ்சி நகரம் முற்றுகையிடப்பட்டிருந்த காலத்திலே கூட அந்த அரண்மனையில் அந்தந்த நேரத்தில் கீத வாத்தியங்களின் ஒலியும், பேரிகை முரசங்களின் கோஷமும், சங்கங்களின் முழக்கமும் ஆராய்ச்சி மணிகளின் சத்தமும் கேட்டுக் கொண்டுதான் இருந்தன.

இவற்றுடன் அரண்மனைத் தாதிப் பெண்கள் கால்களில் அணிந்திருந்த பாதசரங்களின் கிண்கிணி ஓசை இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருக்கும். வேத மந்திரங்களின் கோஷமும், செந்தமிழ்ப் பாடல்களின் கீதநாதமும் சில சமயங்களில் கேட்கும்.

அரண்மனை முன்வாசல் முற்றத்தில் வந்து போகும் குதிரைகளின் காலடிச் சத்தம் சதா கேட்டுக் கொண்டிருக்கும்.

இப்படி இருந்த அரண்மனையில் இப்போது ஆழ்ந்த மௌனம் — பீதியை உண்டாக்கும் பயங்கர மௌனம் — குடிகொண்டிருந்தது.

மணிமங்கலம் போர்க்களத்திலிருந்து மகேந்திர பல்லவரை எடுத்து வந்த பிறகு, இராஜ வைத்தியர்கள் அல்லும் பகலும் அவர் பக்கத்தில் இருந்து சிகிச்சை செய்து வந்தார்கள்.

மகேந்திர பல்லவர் பல நாட்கள் நினைவற்ற நிலையிலேயே இருந்தார். சூரமாரம் போர்க்களத்திலிருந்து மாமல்லர் திரும்பி வந்த பிறகுகூடச் சக்கரவர்த்திக்குச் சுயநினைவு இல்லாமல் இருந்தது.

அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாகக் கண் விழித்துப் பார்க்கவும், தம் எதிரிலுள்ளவர்களைத் தெரிந்து கொள்ளவும் ஆரம்பித்தார்.

இனிமேல் சக்கரவர்த்தி பிழைத்துக் கொள்வார் என்றும், ஆனால் இன்னும் சில காலம் அவரைக் கவலையுடன் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் வைத்தியர்கள் சொன்னார்கள். மாமல்லரைப் பார்க்கும் போதெல்லாம் மகேந்திரருக்கு உணர்ச்சி அதிகமாகிப் பேசுவதற்கு முயன்றபடியால் மாமல்லர் தந்தையிடம் அதிகமாகப் போகாமலிருப்

படிதே நல்லதென்று அபிப்பிராயப்பட்டார்கள்.

இதனால் மாமல்லரின் மன வேதனையும் அமைதிக் குறைவும் அதிகமாயின. அவர் மனம் விட்டுப் பேசுவதற்கு அரண்மனையில் யாரும் இல்லை. தளபதி பரஞ்சோதியோ சேனைகளை அழைத்



துக்கொண்டு கோட்டைக்கு வெளியே சென்று, வாதாபிப் படையால் ஹிம்சிக்கப்பட்ட கிராமவாசிகளுக்கு உதவி செய்வதில் ஈடுபட்டிருந்தார்.

புவனமகாதேவி எப்போதும் கண்ணீரும் கம்பலையுமாக இருந்தார். புலிகேசியை நகருக்குள் அழைப்பதால் கேடுதான் விளையும் என்று தாம் முன்னாலேயே எச்சரித்ததை இப்போது சொல்லிச் சொல்லி வருந்தினார். அதோடு மாமல்லருக்குப் பாண்டிய இராஜ குமாரியை அப்போதே மணம் முடிக்காதது எவ்வளவு தவறு என்பதையும் அடிக்கடி குறிப்பிட்டார். இந்தப் பேச்சு மாமல்லரின் காதில் நாராசமாய் விழுந்தது.

நாளாக ஆக, மாமல்லருக்குச் சிவகாமியைப் பற்றி யாருடனாவது மனத்தைத் திறந்து பேசாவிட்டால் இருதயம் வெடித்துவிடும்போலிருந்தது. அப்படிப் பேசக்கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்? ஆயனர் ஒருவர்தான். அவர்தான் சிவகாமியைப் பற்றித் தாம் பேசுவதை ஒத்த உள்ளத்துடன் கேட்கக் கூடியவர். மேலும் அவருடைய உடல்நிலையைப்பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா? பார்க்கப் போனால் தம்க்கு மகேந்திர பல்லவர் எப்படியோ அப்படியே ஆயனரும் தந்தைதானே? அவரைக் கவனியாமலிருப்பது எவ்வளவு பிசகு?

இவ்விதம் எண்ணி ஒரு நாள் மாமல்லர் ஆயனரை அவருடைய அரண்ய வீட்டில் பார்ப்பதற்காகத் தன்னந்தனியே குதிரை மீதேறிப் பிரயாணமானார்.

காட்டு வழியாகப் போய்க்கொண்டிருக்கையில் அவருக்குத் தாமரைக் குளம் ஞாபகம் வந்தது. தாமும் சிவகாமியும் எத்தனையோ ஆனந்தமாக நாட்களைக் கழித்த இடம் — ஒருவர்க்கொருவர் எத்தனையோ அன்பு மொழிகளைக் கூறிப் பரவசமடைந்த இடம்— அப்பேர்ப்பட்ட குளக் கரையைப் பார்க்க வேண்டும் என்று ஆசை உண்டாயிற்று.

எனவே, பாதையை விட்டுச் சிறிது விலகித் தாமரைக் குளக்கரையை நோக்கிக் குதிரையை மெதுவாகச் செலுத்தினார்.

சற்றுத் தூரம் போனதும் அந்தக் காட்டு வழியில் எதிரே பெண் ஒருத்தி வருவது தெரிந்தது. மாமல்லர் வருவது கண்டு திடுக்கிட்ட தோற்றத்துடன் அவள் ஒதுங்கி நின்றாள். மாமல்லர் தமது பரம்பரையான குலப் பண்பாட்டுக்கு உகந்தபடி அவளுடைய முகத்தை மறுமுறை ஏறிட்டுப் பாராமல் தம் வழியே சென்றார். ஆனால், சிறிது தூரம் சென்றதும் அந்த ஸ்திரீயின் முகம் ஏற்கனவே பார்த்த முகம் போல் ஞாபகத்துக்கு வந்தது. "அவள் யார்? அவளை எங்கே பார்த்திருக்கிறோம்?" என்று எண்ணமிட்டுக் கொண்டே மாமல்லர் தாமரைக் குளத்தை அடைந்தார்.

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

# கலங்கிய குளம்

ஆஹா! அந்தப் பழைய தாமரைத் தடாகம்தானா இது? சிவகாமியும் தாமும் எத்தனையோ இன்பமான தினங்களைக் கழித்த குளக்கரைதானா இது?

ஆம்! அதுதான். ஆனால், அதன் தோற்றம் இப்போது அடியோடு மாறிப் போயிருந்தது. மாமல்லரின் மனம் அடைந்திருந்த நிலையை அந்தத் தாமரைக் குளம் நன்கு பிரதிபலித்தது.

பளிங்கு போல் தெளிந்த தண்ணீர் ததும்பிக் கொண்டிருந்த தடாகத்தில் இப்போது பெரும் பகுதி சேறுகியிருந்தது. காண்போர் கண்களையும், உள்

# நட்சத்திரமும் நவநாகரீகமும்

## லால்பாய் டெக்ஸ்டைல்ஸ்

உங்களுக்கென ஒரு பாக்ய
நட்சத்திரம்...ஒரு நாகரீகம் உண்டு...
இரண்டையும் சிறப்புடன் இணைப்பது—
லால்பாய் டெக்ஸ்டைல்ஸ்.
பெருமைமிகு பிரிண்டுகள்,
அருமையான வண்ணங்கள்
பலவிதத் துணிவகைகள்.
தேர்ந்தெடுக்க 7 மடங்கு வகைகள்
வேறு எங்குதான்
கிடைக்கும்

**மேஷம் :**
நீங்கள் படைப்பாற்றல் நிறைந்தவர். சூழ்நிலைக்கேற்ப அனுசரித்து நடப்பீர், முன்னேற விரும்புபவர். தலைகனம் நிறைந்தவர். உங்கள் அதிர்ஷ்ட வண்ணங்கள்— சிவப்பு, உதிரச் சிவப்பு (ஸ்கார்லெட்). உங்கள் உடையைப் பார்த்து அனைவரும் பாராட்ட வேண்டுமென விரும்புவீர்கள்.

**மிதுனம் :**
நீங்கள் அனுசரித்துப் போகக்கூடியவர். ஆற்றல் படைத்தவர். சூழ்நிலையை உடனே எடை போடத் தெரிந்தவர். உங்கள் அதிர்ஷ்ட வண்ணங்கள்— மஞ்சள், ஆரஞ்சு, சுத்தரிப்பூ வண்ணம். உடைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காதவர்.

**ரிஷபம் :**
நீங்கள் உறுதியான மனம் படைத்தவர். உணர்ச்சி வசப்படக் கூடியவர். விரைந்து செயலாற்றுபவர். உங்கள் அதிர்ஷ்ட வண்ணங்கள்— நீலங்கள், வெளிர் சிவப்புக்கள். ஆரவாரத்தை விரும்பாதவர் நீங்கள். எனவே பரம்பரையான முறையில் ஆடம்பரமற்று உடுத்த விரும்புவீர்கள்.

லால்பாய்—
அதிர்ஷ்டப் பொருத்தம் அளிப்போர்




ஏழு மில்களின் ஏற்றமிகு துணிகள்

CHL(8.39.183 TM

சில்லறை விற்பனையாளர்கள் :
M/s. வெங்கடேஷ், 243, 244, என்.எஸ்.ஸி. போஸ் ரோடு, சென்னை-1.
M/s. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.
M/s. ஈஸ்வரீஸ், 26-பி, மேற்கு டவர் தெரு, மதுரை-1.

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை!
இளமைப் பூங்காவில் பூரிப்புடன்
பூத்துக் குலுங்கும் இந்த
இளமங்கை, அழகு
ராணியாகத் திகழ்கிறாள். அந்த
புத்தெழில் என்றுமே நிலைத்திட
அவள் ஜெய் அழகு சாதன சோப்
உபயோகிக்கிறாள். மல்லிகை மணம்
வீசும் ஜெய் சோப் மேனியை
மிருதுவாக்கி, பொன்னொளி
வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்

**ஜெய்**

அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM

எத்தையும் ஒருங்கே கவர்ந்து பரவசப் படுத்திய செந்தாமரை மலர்கள், குவிந்த மொட்டுக்கள், பச்சை வர்ணக் குடைகள் போல் கவிந்து படர்ந்திருந்த இலைகள் — இவை ஒன்றும் இப்போது இல்லை. யானைகளின் காலினால் சேற்றோடு சேர்த்து மிதிக்கப்பட்ட சில தாமரை இலைகள் காணப்பட்டன. வாடி வதங்கிய இலைகளை உடைய தாமரைக் கொடிகள் துவண்டும் உலர்ந்தும் கிடந்தன.

குளக்கரையில் தழைத்துச் செழித்திருந்த விருட்சங்களின் கிளைகள் முறிக்கப்பட்டுப் பாதி மொட்டையாகக் காணப்பட்டன.

ஆ! அந்த விசி பலகை! அதுவும் பாதியில் முறிந்து ஒரு பாதி தரையில் துகள் துகளாய்க் கிடந்தது. இன்னொரு பாதி அப்படியே பிளந்த முனைகளுடன் நின்றது.

இருதயம் உடைந்த மாமல்லர் அந்தப் பிளந்த விசிபலகையின் மேல் உட்கார்ந்தார். சுற்றுமுற்றும் பார்த்தார். பழைய ஞாபகங்கள் ஒன்றை ஒன்று தள்ளிக் கொண்டு போட்டியிட்டுக் கொண்டு வந்தன.

வசந்த காலத்தில், வனத்திலுள்ள மரங்களெல்லாம் புதுத் தளிர்களும் புஷ்பங்களுமாய்க் குலுங்கிக் கொண்டிருந்த நாட்களில், எத்தனையோ தடவை சிவகாமியைத் தேடிக் கொண்டு அவர் அங்கு வந்ததுண்டு. கானகத்துப் பட்சிகள் கலகலவென்று சப்தித்துக் கொண்டிருந்த நேரங்களில், அவரும் சிவகாமியும் அதே விசிபலகையில் உட்கார்ந்து கண்களோடு கண்களும் கரங்களோடு கரங்களும் இருதயத்தோடு இருதயமும் பேசும்படி விட்டு, வாய் மூடி மௌனிகளாய் நேரம் போவது தெரியாமல் இருந்ததுண்டு.

கீழ் வான முகட்டில் பச்சை மரங்களுக்கிடையே பொற்குடத்தைப் போல் பூரண சந்திரன் உதயமாகும் போது, அந்த முழுமதியையும், சிவகாமியின் முகத்தையும் மாமல்லர் எத்தனை தடவைகள் ஒப்பிட்டுப் பார்த்திருப்பார்.

தாமரைக் குளத்திலே ததும்பிய தெளிந்த நீரின் விளிம்பிலே நின்று, மேலே தோன்றிய சிவகாமியின் உண்மை உருவத்தையும் தண்ணீரிலே தெரிந்த அவளுடைய பிரதிபிம்பத்தையும் மாறி மாறிப் பார்த்து மகிழ்ந்தது எத்தனையோ நாள்!

இம்மாதிரி ஞாபகங்கள் எல்லாம் மாமல்லருக்கு ஆரம்பத்தில் இன்பத்தை அளித்தன. ஆனால், இடையிடையே, 'இனிமேல் அந்த மாதிரி அனுபவங்கள் நமக்குக் கிட்டப் போவதே இல்லை' என்ற நினைவு வந்ததும் மனத்தில் கொடிய வேதனை உண்டாயிற்று. இனி மேல் பொறுக்க முடியாது என்ற மன நிலை ஏற்பட்டதும் மாமல்லர் குதித்து எழுந்தார். விரைந்து சென்று குதிரை மீது தாவி ஏறி ஆயனர் வீட்டை நோக்கிச் செலுத்தினார்.

**கா**ஞ்சியிலிருந்து புறப்பட்ட சமயம் அவர் மனத்திலிருந்த அமைதி இப்போது இல்லை. அமைதிக்குப் பதிலாக இப்போது கோபமும் ஆத்திரமும் அவர் மனத்தில் குடிகொண்டிருந்தன. சிவகாமியைக் கொள்ளை கொண்டு



போன சளுக்கப் பகைவர்கள் மீது குரோதம் எழுந்தது.

மூடத்தனத்தினால் சிவகாமியைப் பறி கொடுத்த ஆயனர் மீது கோபம் கோபமாக வந்தது.

புத்த பிக்ஷுவின் மீது இன்னதென்று விவரமாகாத சந்தேகமும் கோபமும் ஏற்பட்டன. ஆ! அந்தப் பாஷாண்டியினிடம் அவருக்கு எப்போதுமே நல்ல அபிப்பிராயம் கிடையாது. பிக்ஷு மனம் வைத்திருந்தால் சிவகாமியைக் காப்பாற்றி யிருக்கலாம் அல்லவா? ஏன் காப்பாற்றவில்லை? ஏன் ஆயனரிடம் செய்தி ஒன்றும் சொல்லவில்லை? பிக்ஷு என்ன ஆனார்? எப்படி மாயமாய் மறைந்தார்?

சிவகாமியின் அரங்கேற்றம் தடைப்பட்ட அன்றிரவு இராஜ விஹாரத்



தின் அருகில் புத்த பிக்ஷுவைச் சுட்டிக் காட்டிச் சக்கரவர்த்தி தமக்கு எச்சரித்தது மாமல்லருக்கு நேற்று நடந்தது போல் ஞாபகம் வந்தது.

உடனே, சோபம் தந்தையின் பேரிலேயே திரும்பிற்று. மகேந்திர பல்லவரின் தந்திர மந்திரங்கள், சூழ்ச்சிகள், வேஷங்கள்—இவற்றினாலேதான் பல்லவ இராஜ்யம் இன்றைக்கு இந்தக் கதியை அடைந்திருக்கிறது! தாமும் சிவகாமியை இழக்கும்படி நேரிட்டிருக்கிறது!

திடீரென்று ஒரு விபரீதமான சந்தேகம் மாமல்லரின் உள்ளத்தில் உதித்தது.

ஒருவேளை சிவகாமி சிறைப்படும் வண்ணம் சூழ்ச்சி செய்தவர் மகேந்திர பல்லவர்தானோ? இல்லாவிடில் எதற்காகத் தன்னைப் போர்க்களத்துக்கு அனுப்பிவிட்டு, மண்டபப்பட்டுக் கிராமத்திலிருந்து சிவகாமியைத் தருவிக்கிறார்?

ஒருவேளை அந்தப் பெண் கமலி கூடச் சக்கரவர்த்தியின் சதிக்கு உடந்தையாக இருந்திருப்பாளோ? எல்லாரும் சேர்ந்து தன்னை இப்படி வஞ்சித்து விட்டார்களோ? ஆஹா! இது என்ன சதிகார உலகம்? துரோகமும், தீவினையும் நிறைந்த மாய உலகம்!

இத்தகைய மன நிலையில் மாமல்லர், ஆயனர் வீட்டு வாசலுக்கு வந்து சேர்ந்தார். சிவகாமி சிறைப்பட்டது சம்பந்தமாக மர்மமாகவும் விளங்காமலும் இருந்த சில விஷயங்களை ஆயனரிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள அவர் விரும்பினார். வீட்டு வாசலுக்குச் சற்றுத் தூரத்திலேயே குதிரையை நிறுத்திவிட்டுத் தாமும் சற்று அங்கேயே நின்று மனத்தை அமைதிப்படுத்திக் கொண்டார். பிறகு சாவதானமாக நடந்து வந்து ஆயனர் வீட்டுக்குள் நுழைந்தார்.

வீட்டுக்குள்ளே பேச்சுக் குரல் கேட்டது. அவருக்குச் சிறிது வியப்பை அளித்தது. ஆயனர் யாருடன் பேசிக் கொண்டிருக்கிறார்?

உள்ளே சிற்ப மண்டபத்தில் ஆயனருக்கு அருகில் உட்கார்ந்திருந்த மனிதனைப் பார்த்ததும் மாமல்லருடைய வியப்பு அளவுகடந்தது. அந்த மனிதன் ஒற்றர் தலைவன் சத்ருக்னன்தான். சத்ருக்னனை அங்கே கண்டதுகூட மாமல்லருக்கு அவ்வளவு வியப்பு அளிக்கவில்லை. சத்ருக்னனது முகத்தைப் பார்த்ததும், பளிச்சென்று இன்னொரு முகம் ஞாபகத்துக்கு வந்தது. அப்படி ஞாபகத்துக்கு வந்த முகம் சற்று முன்னால் காட்டுப் பாதையில் அவர் பார்த்த பெண்ணின் முகமேதான்!

என்ன அதிசயமான ஒற்றுமை! ஒரு வேளை சத்ருக்னனுடைய தங்கை அல்லது தமக்கையோ அவள்? அல்லது ஒரு வேளை இவனே....? சந்தேகம் தோன்றி ஒரு கணத்துக்குள்ளேயே அது தீர்ந்துவிட்டது. சத்ருக்னனுக்கு அருகில் ஒரு சேலையும், மற்றும் ஸ்திரீகளுக்குரிய சில ஆபரணங்களும் கிடந்ததை நரசிம்ம பல்லவர் பார்த்தார். (தொடரும்)



★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

பந்து வீச்சு நிபுணர்களுக்குச் சாதாரணமாய் மட்டை பிடித்து ஆட வராதல்லவா?

மேற்கிந்தியத் தீவு கோஷ்டியின் பந்து வீச்சு மன்னரான கே. டி. பாஸ்லர் ஒரு சமயம் மட்டை பிடித்து ஆடிக் கொண்டிருந்த போது பந்து அவர் தலையைத் தாக்கி விழுந்துவிட்டது! இச்சம்பவம், 'பாட்ஸ்மனும் விளங்குவது எப்படி?' என்று தமக்குச் சற்றுக் கோபித்ததாகப் பின்னால் அவர் வேடிக்கையாகக் குறிப்பிட்டார்:

"இந்த விபத்து எனக்கு நல்ல படிப்பினையைத் தந்தது. பந்தை நாம் அடிக்க வேண்டுமே தவிர பந்து நம்மை அடித்துவிட வாய்ப்புத் தரக் கூடாது என்று புரிந்து கொண்டேன்!"



பாரத் ஹெவி எலக்டிரிகல்ஸ் நிறுவனத்தின் சேர்மன் திரு வி. கிருஷ்ண மூர்த்தி அவர்களின் புதல்வன் சிரஞ்சீவி சந்திராவுக்கும், ஓய்வு பெற்ற ஐ. ஏ. எஸ். அதிகாரி திரு கணபதி ஐயர் பேத்தியும் டாக்டர் ஈ. ஜி. ராமசந்திரன் அவர்கள் புதல்வியுமான சௌபாக்கியவதி லட்சுமிக்கும் டிசம்பர் 4ம் தேதி சென்னை தியாகராய நகரிலுள்ள எஸ். ஜி. எஸ். சபா கல்யாண மண்டபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

காலை முகூர்த்தத்துக்கும் மாலை வரவேற்புக்கும் ஆளுநர் மாண்புமிகு கே. கே. ஷா அவர்களும், மாண்புமிகு தமிழக அமைச்சர்களும், தொழிலதிபர்களும், பிரமுகர்களும், பத்திராதிபர்களும் ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

வாழ்க மணமக்கள்



## பிஞ்ஜரா

கலைப் படங்களைத் திரையிடுவதற்கென்றே அண்மையில் சென்னையில் தோன்றியுள்ள தியேட்டர் தேவிகலா. நான்கு புறமும் பிடிப்பின்றி மிதக்கும் திரையைக் கொண்ட வசதி மிகு சிறிய தியேட்டர். இதில் திரையிடப்பட்ட முதல் கலைப்படம் சாந்தாராமின் பிஞ்ஜரா.

கூண்டு என்னும் பொருள் கொண்ட இப்படத்தின் கதாநாயகி சந்திர கலா. இப்பாத்திரம் ஏற்றி

## ரோடி, கபடா, ஔர் மக்கான்

'கதைக்குக் கால் உண்டா?' என்று கேட்பவர்கள் மனோஜ்குமாரின் மேற்சொன்ன இந்திப் படத்தைப் பார்த்தால், 'கதைக்குக் கட்டாயம் கால் உண்டு. அது போகிற போக்கில் போய் நிற்க வேண்டிய இடத்தில்தான் நிற்கும்' என்பதை ஒப்புக்கொண்டே தீருவார்கள்.

உண்ண உணவு, உடுக்க உடை, ஒண்ட வீடு - இம் மூன்றும் மக்களின் இன்றைய அத்தியாவசியப் பிரச்னைகளாக முளைத்து நிற்கின்றன. இந்தப் பிரச்னைகளுக்கு ஒரு வடிகால் காணும் முயற்சிக்கு அடிக்கல் நாட்டுவதாக ரசிகர்களைக் கனவு காண வைத்துவிட்டுப் பணம் பண்ணும் பாட்டையில் சென்று விட்ட பெருமையை மனோஜ் குமார் அநாயாசமாகத் தேடிக்கொள்கிறார். அவரே எழுதி, இயக்கி, தயாரித்த படம் என்பதோடு அவரே பிரதான பாத்திரம் ஏற்ற படம். அதனால் படம் முழுவதும் அவரது ஆதிக்கம் விரவி நிற்கிறது. அதனால் ஜீனத் அமன், மௌஷமி சட்டர்ஜி இரு கதாநாயகிகளையும் தம்மைச் சுற்றியே வளைய விட்டிருக்கிறார். மேலும் படத்துக்குப் புகழ் சேர்க்கப் பல பிரபல நடிகர்கள் - பிரேம்நாத், சசிகபூர், அமிதாப் பச்சன், மதன்புரி, காமினி கௌஷல் என்று இருந்தாலும் - கொடுத்த பாத்திரங்களுக்கு இவர்கள் நியாயம் வழங்குகிறார்கள் என்றாலும் - 'அடங்கி நடித்தவர்'களாகவே தோன்றுகிறார்கள்.

ஆரம்பத்தில் கதை அரசியல் பிரசாரமென முழுகி முடிவில் கடத்தலின் கையில் சிக்கி வெறும் ஸ்டண்ட் படமாகிவிடுகிறது. என்றாலும் காமிரா பல இடங்களில் கலை முழக்கம் செய்திருக்கிறது. மழுங்கிய கத்திரிக்கோலிடம் மாட்டிக் கொண்டு கதை நீண்டிருக்கிறது. ஆனால் காதுக்கினிய கருத்துள்ள பாடல்கள் ஏனைய வெற்றிப் படங்களைப் போல் இப்படத்தையும் பிழைக்க வைத்தால் வியப்பதற்கில்லை!

- ரா.வீ.



## நெல்லு

துல்லியமான கவிதையைப் படித்தால் என்ன இன்பம் கிட்டுமோ, அத்தகையதோர் இன்ப உணர்ச்சி இந்த மலையாளப் படத்தைப் பார்க்கும்போது ஏற்படுகிறது.

மலைகளும் வனங்களும், ஓடைகளும், பசும் வயல்களும் நிரம்பிய கேரளத்தின் வயல் நாட்டுப் பகுதியை அப்படியே கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார் டைரக்டர்.

மிக நளினமான கதை. வயல் நாட்டுப் பகுதியில் சாவித்திரி வாரியரால் (காவியூர் பொன்

ருப்பவர் சந்தியா. 'நௌடங்கி' என்னும் தெருக் கூத்து ஆடுபவள்.

மாதோபூர் என்னும் சிறு கிராமத்தை ஆதர்ச கிராமமாக உருவாக்கிக் கேடயமே பெறச் செய்தவர் வித்யாதர். குருஜி என்று அவ்வூர்வாசிகளால் போற்றப்படுபவர். பிரும்மச்சரியமே வாழ்க்கை என்ற குறிக்கோளுடன் வாழ்பவர். ஸ்ரீராம் லாகூ இப்பாத்திரத்தை ஏற்று நடித்திருக்கிறார்.

அவ்வூரில் முகாமிட வரும் அந்தத் தெருக்கூத்துக் கோஷ்டியைக் கிராமத்தின் ஆதர்ச ஒழுக்கம் கெட்டுவிடும் என்று ஆட அனுமதிக்கவில்லை. அவரைப் பணிய வைப்பதாகச் சூளுரைத்துக் கிராமத்தின் எல்லையில் தெருக்கூத்து நடத்துகிறாள் சந்திரகலா.

அன்ந்த மாணவியின் கதைக் கரு சாந்தாராமின் கைத்திறனால் கச்சிதமாக வளருகிறது. சந்திரகலாவின் கூண்டுப் பறவையாகிறார் குருஜி. மொழி தெரிந்தவர்களும் மொழி தெரியாதவர்களும் புரிந்துகொள்ளும் விதத்தில் கிராமியக் கொச்சை மொழி வசனங்கள் பொருள் பொதிந்து கவிவண்ணம் கூட்டுகின்றன. இப்பொறுப்பேற்ற விசுவாமித்ர ஆதிநும் முன்ஷியும் பாராட்டுக்குரியவர்கள். இசைக்கு ராம்கதம், புகைப்படச் சிறப்புக்கு சிவாஜி ஸாவந்த்; டைரக்ஷனுக்கு சாந்தாராம் பிரதான நடிகர்கள் மட்டும் என்ன, உபநடிகர்களுமே தங்கள் பங்கைத் திறம்படச் செய்திருக்கிறார்கள்.

இம்முறையில் பார்க்கப் போனால் நிறைவான படம். எனினும் நிறைவிலும் குறைவைக் காட்டும் இடங்களும் பல உண்டு.



ணம்மா) என்ற மாதரசி பெரும் பண்ணைக்கு உடைமையாளராக வசித்து வருகிறாள். அவள் இள வயதிலேயே கைம்மையுற்றவள்.

ராகவன் நாயர் என்ற இளைஞன் அப்பகுதிக்கு வருகிறான். இருவருக்கும் சந்திப்பு ஏற்பட்டு நெருங்கிப் பழகவும் வாய்ப்பு கிட்டுகிறது. ராகவன் வயல் நாட்டையும் வயல் வரப்புகளையும் மக்களையும்பற்றித் தான் பெற்ற அநுபவங்களை நாட்குறிப்புப் புத்தகத்தில் பதித்து வருகிறான்.

அப்பகுதி ஆதிவாசிகளின் வாழ்க்கையையும் பழக்க வழக்கங்களையும் குறித்து வருகிறான்.

கருமட்டி (கனகதுர்க்கா) என்ற திருமணமான ஆதிவாசிப் பெண் மல்லன் (மோகன்) மீது தீராத காதல் கொள்கிறாள். மல்லன் தடுக்கிறான். மல்லனுக்கும் மாரா (ஜெயபாரதி) என்ற பெண்ணுக்கும் திருமணம் நிச்சயமாகிறது.

வழிப் போக்கனாக வரும் ராகவன் நாயர் (பிரேம் நஸீர்) மீது, இளமையில் கைம்மையுற்ற சாவித்திரி வாரஸியார் வெளியில் விண்டுரைக்க முடியாத காதல் கொள்கிறாள். இப்பகுதியில் மிக நேர்த்தியாக காவியூர் பொன்னம்மா நடிக்கிறார். ஆதிவாசிகளின் வெளிப்படையான காதல் போராட்டத்துக்கும் வெளியே சொல்லிக் கொள்ளக் கூசும் சாவித்திரியின் காதல் போராட்டத்துக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் படத்தின் இலக்கியச் சுவையாகின்றன.

ஆதிவாசிகளின் பழக்க வழக்கங்கள், அப்படியே படமாக்கப்பட்டுள்ளன.

ஜேசுதாஸ், சுசீலா, மன்னா டே, மாதுரி, ஜெயசந்திரன் லதா மங்கேஷ்கர் ஆகியோர் பாடல்களைப் பாடி காதுக்கு இனிய விருந்தளிக்கின்றனர்.

காது கண், கருத்து - ஆகிய மூன்றுக்கும் அரிய விருந்தாக மிளிர்கிறது ராமுகாரியத் டைரக்ட் செய்துள்ள 'நெல்லு!'

எஸ்.வி.எஸ்

# ஏறிய செடிம்...

## ப. ராமமூர்த்தி

அது ஒரு பழங்காலக் கோயில். அருள்மிகு அழகிய கயல் கண் அம்மை, அதாவது சமீப காலம் வரை அங்கயற்கண்ணி என்று பிரசித்தி பெற்ற அம்பாள் கோயில்.

இடிந்த மண்டபம். சிதைந்த மதில். உடைந்த தேர். உருவிழந்த வாகனங்கள். ஏழை ஊர் மக்கள். சரிவரக் கண்காணிப்பில்லாமல் போய்விட்ட நிலபுலன்கள்.

கோயில் மகிமை அம்பாள் சந்நிதிக்குள் மட்டுமே அடங்கி ஒடுங்கிப் போயிற்று.

அன்று அம்பாளின் ஜாதக விசேஷம் கோயிலுக்கு மாண்பு மிகு அமைச்சர்கள் வர ஏற்பாடாகியிருந்தது.

ஊர் அமர்க்களப்பட்டது. முடிந்த வரையில் கோயிலுக்கு மேக்கப் செய்யப்பட்டது. கோயிலைச் சுற்றி நான்கு மாட வீதிகளிலும் சுண்ணாம்பு தெளிக்கப்பட்டது. தோரணங்கள். அலங்கார வளைவுகள். வரவேற்பு முழக்கங்கள். போலீஸ் கெடுபிடி. அதிகாரிகள் ஆர்ப்பாட்டம். சில்லறை அதிகாரிகளின் பரபரப்பு. எல்லாம் சேர்ந்து ஊருக்கு ஒரு களை வந்தது.

தலைநகரிலிருந்து போலீஸ் வான்கள், கார்கள், அதிக பஸ் போக்குவரத்து. வெளியூர் நாதசுர ஜோடிகள், அதிர்வேட்டு, மத்தாப்பூ, யானை, குதிரை, ஒட்டகம், பல்லக்கு— இத்தியாதி பரிவார வைபவங்கள்.

கோயிலைச் சுற்றிலும் கிராமவாசிகள் கூட்டம். பெரியதொரு திருவிழாக் களை கட்டிவிட்டது. மிட்டாய்க் கடை, பிளாஸ்டிக் கடை, அவல் பொரி, ரங்கராட்டினம் — பாம்புத் தலை மனித உடம்பு, பெண் தலை பாம்பு உடம்பு, அஞ்சு கால் ஆடு, மலைப் பாம்பு—நல்ல பாம்பு ஆட்டம் எல்லாம் ஒரே அமர்க்களம்!

"என்னடா, அமாசி, இன்னைக்கு என்னடா கோயில்லே! நாம கோவி ஆட முடியாம வெரட்டிட்டாங்களே, போலீஸ்காரனுங்க....!"

"இன்னைக்குச் சாயரட்சை பெரிய மந்திரி வராரும். நைனா சொல்லிச்சு. ஆத்தா கோயில்லே நம்ம குருக்கள் இத்தினி நாளு சமாச்ருதத்திலே மொணமொணப்பாரில்லே! இனிமே அது கூடாதாம். தமிள்லே மொணமொணக்கணுமாம். அதை ஆரம்பிச்சு வைக்கப் போறாராம், மந்திரி!"

2

மாலை மணி ஆறு கழிந்து ஏழாகி விட்டது. அமாவாசை இருளானதால் மின்சார விளக்கு ஒளியில் கோயில் பளிச்சென்று பிரகாசித்துக் கொண்டிருந்தது.

கோயிலுக்கு முன்புறம் இருந்த மைதானத்தில் விழா தொடங்க ஏற்பாடு.

மணி ஏழரைக்கு மந்திரி வந்தார். பரிவாரங்கள் வந்தன. கோயில் யானை (வெளியூர்) ஒரு பெரிய ரோஜா மாலையைத் துதிக்கையால் தூக்கி மாண்புமிகு மந்திரியின் கழுத்தில் போட்டுத் தலை தாழ்த்தி வணங்கி மரியாதையாகப் பிளிறிற்று.

பரிவாரங்கள் கைதட்ட ஊர்க் கூட்டம் மெதுவாக, போலீஸுக்குப் பயந்துகொண்டே கலந்து கொண்டது. மந்திரி எழுந்தார். கனைத்துக் கொண்டார். மைக் மக்கார் செய்தது.

'மைக் மைக்' என்று சலசலப்பு. உள்ளூர் மைக்காரர் வேர்க்க விறுவிறுக்க மேடை மேல் ஏறி, "ஹலோ, ஹலோ! மைக் டெஸ்டிங்—ஒன்! டூ! த்ரீ!" என்று கீச்சுக் குரலில் கத்த மைக் பிரமாதமாய் வேலை செய்ய ஆரம்பித்தது.

"பெரியோர்களே, தாய்மார்களே! தமிழ் நாட்டுத் தங்கங்களே, ஏன் இவ்வளவு பெரிய மாலை?.... ம்.... உங்கள் அன்பின் ஓர் உருவாக அதை நான் ஏற்றுக் கொள்கிறேன். எனக்கு மாலை போட்ட இந்த யானைக்கு நாமம் போட்டிருக்கிறார்கள். நான் இப்போது உங்களுக்கு....."

கூட்டத்தில் சிரிப்பு.

"நான் உங்களுக்குச் சொல்லப் போவது... இவ்வளவு பெரிய மாலை. இவ்வளவு பெரிய யானை. இவ்வளவு பெரிய நாமம்! இந்த மாதிரி நம் மனசும் பெரிசாகணும். சாமிக்கு அர்ச்சனை செய்யறீங்க. அது என்ன என்று உங்களுக்குப் புரியுதா—சாமிக்குப் புரியுதா?

"தெரியாது. சாமிக்கு எதுவுமே புரியாது. அது கல் சாமி! அதுக்குக் காது கெடையாது, கண் கெடையாது, வாய் கெடையாது, எந்த உணர்வுமே கிடையாது. அதனால் நாம்தான் நமது திருப்திக்கு ஏதேதோ சாமி பேரைச் சொல்லிச் செய்யறோம்! செய்யற காரியத்தைப் புரிஞ்சு செய்யணும். அது தான் எங்க ஆசை! அதுக்குத்தான் இப்போ தமிழ்லே அர்ச்சனை......."

மந்திரி அரை மணி நேரம் பேசினார். அதற்குள் மூன்று சோடா குடித்தார்.

தமிழில் அர்ச்சனை தொடங்கியது. கொட்டு மேளம், அதிர்வேட்டு, மக்கள் ஆரவாரம் இத்தியாதி கோலாகலத்துடன்!

3

மணி ஒன்பது. மந்திரியின் மணிமொழிகளையும் உள்ளூர் வெளியூர்ப் பிரமுகர்களின் கர்ச்சனை முழக்கங்களையும் கேட்டுக் கைதட்டிவிட்டு அடுத்த தேர்தலுக்கு மந்திரியின் கட்சிக்கு ஓட்டுப் போட வேண்டியதுதான் என்ற தீர்மானத்துடன் மக்கள் கூட்டம் கலைந்து போயிற்று.

மந்திரியும் சில முக்கிய புள்ளிகளும் போலீஸ் அதிகாரிகளும் மட்டுமே மிஞ்சி நின்றனர்.

கோயில் பிராகாரத்துள் அமைக்கப்பட்டிருந்த சிறு அலங்காரப் பந்தலில் எல்லோருக்கும் பிரசாதங்கள் வழங்கப்பட்டன.

மந்திரி சந்நிதிக்குள் பிரவேசிக்க விரும்பாத காரணத்தால் மற்றவரும் அவருடனேயே இருந்து மந்திரி உதிர்த்த சிரிப்பு வெடிகளை ரசித்துக் கொண்டிருந்தனர்.

மந்திரி திரும்ப வேண்டிய நேரம் வந்துவிட்டபடியால் போலீஸ் அதிகாரிகள் கோயிலுக்கு வெளியே வந்து ஆயத்தமாயினர்.

மந்திரியும் இன்னும் சிலரும் மட்டும் கோயிலின் முன் மண்டபத்தை ஆராய்ந்து பார்த்து விட்டு உள் பிராகாரத்துப் புல் புதர்வெளியில் மெதுவாக நடக்கத் தொடங்கினர்.

கோயில் குருக்களும் கோயில் நிர்வாகிகள் இருவரும் கைகட்டி வாய் பொத்தி அவர் களுக்குப்பின் நடந்தனர்.

''ஏனைய்யா, இந்தக் கோயிலில் வௌவால் உண்டா?'' என்று மந்திரி கேட்டார்.

கோயில் அதிகாரி இலேசாகச் சிரித்தார்.

''இருக்கிறதய்யா!''

'' எத்தனை இருக்கும்?''

''தெரியாதுங்க. அதுக்கு ஒரு கணக்கா?''

''ஆயிரம் இருக்குமா? கோயில் இத்தனை பழசாயிருக்குதே, ஆயிரம் வௌவால்கூட இல்லாவிட்டால் என்ன அய்யா பெருமை!''

கூட்டம் சிரித்தது.

ரசித்தவாறே மேலும் நடந்தார்.

'பெட்ரோமாக்ஸ்' ஒளி முன்னே விளையாடிக் கொண்டிருந்தது.

''இங்கெல்லாம் ஏன் இப்படிப் புதர் மண்டிக்கிடக்குதுங்க? சுத்தம் செய்யக் கூடாதா?''

''செய்வனுங்க — சித்திரைத் திருவிழா வர்ற சமயம் இங்கெல்லாம் ரொம்பத் துப்புரவா ஆயிடுங்க!''

''நல்லா இருக்கய்யா உங்க தொண்டு!''

கோயில் அதிகாரிக்கு உள்ளூறக் கொஞ்சம் குளிர். ''எதையாவது சொல்லித் தம் வாயில் மண்ணை அள்ளிப் போட்டுவிடப் போகிறாரே மந்திரி என்று பயம்!

ஒரு திருப்பம்.

''ஆ!'' மந்திரி தம் காலைப் பிடித்துக் கொண்டு அலறினார்.

''என்னங்க, என்னங்க! என்ன ஆச்சு? முள்ளுக் கின்னு தைச்சப்பிடிச்சா?'' என்று நாலு பேர் மந்திரியிடம் பாய்ந்தார்கள். அப்போது—

கோயிலின் சந்நிதிச் சுவரை யொட்டி ஏதோ நெளிவது தெரிந்தது. மந்திரி ''அதோ அதோ!'' என்று கத்தினார்.

ஒரு பெரிய கரு நாகம்; ஒருமுறை பெரிதாகப் படமெடுத்துச் சீறிவிட்டு எங்கோ சரசரவென்று ஓடி மறைந்து விட்டது.

''ஐயையோ! அய்யாவைப் பாம்பு கடிச்சுட்டாப்பலே இருக்குதே! யார்ராங்கே, ஓடுடா, ஓடு! நம்ப ஹோமியோபதி டாக்டரையா உமாபதியைக் கூட்டியாடா, சல்தி!''

கோயில் உள் பந்தலில் மந்திரி கீழே ஜமுக்காளத்தில் படுத்திருந்தார். விஷம் வேலை செய்ய ஆரம்பித்தது. உடல் வியர்த்தது. வாயில் இலேசாகத் துளித் துளியாக நுரை தள்ளியது. சுமார் பதினைந்து நிமிஷங்களில் ஹோமியோபதி டாக்டர் உமாபதி வேகமாக ஓடிவந்தார்.

பாவம், அவருக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. பாம்பு கடித்தது மந்திரியை அல்லவா? தாம் ஏதாவது செய்து மந்திரி மண்டையைப் போட்டால் பாவப் பழி தம் தலையில் விழுமே என்று வேறு பயப்பட்டார்.

''பாம்புக் கடிக்கு என்னிடம் மருந்து ஏதும் இல்லே ஐயா!'' என்று துடித்தார், அவரைத் தான் பாம்பு கடித்த மாதிரி!

போலீஸ் மூலை மூலையாய்த் தேடியது. டார்ச்சும் தடியுமாக! அந்தப் பொல்லாத பாம்பு மாயமாய்ப் போய்விட்டது!

போட்டிக் கதை - 16



''மெட்ராஸுக்குக் கொண்டு போயிடலாம்!''

''அதுக்கு ஒரு மணி நேரம் வேண்டுமே அய்யா! அதுக்குள்ளாற அய்யாவுக்கு எதிரூச்சம் ஆயிட்டா?''

''அப்போ என்னய்யா செய்யறது?''

''யாராவது ஒரு கூரான கத்தி கொண்டாங்க. கடிவாயைக் கீறி வாயால் உறிஞ்சி விஷத்தைத் துப்பிடலாம்!''

''நல்ல பாம்பு நல்லாக் கடிச்சிருக்குதுங்க. நாடிகூட விழுந்துட்டாப் போலே இருக்கு!''

கத்தி வந்தது. போலீஸ் அதிகாரி மந்திரியின் காலைக் கீறினார். — சற்று அழுத்தமாகவே! ரத்தம் கசிந்தது.

பாவம், மந்திரி மிரள மிரள மிக மிகப் பரிதாபமாக விழித்தார்.

''கடிவாயில் வாய் வைத்து விஷத்தை உறிஞ்சணுமே! யார் செய்வது?''

''எனக்கு நாக்கிலே புண்!''

''எனக்குத் தொண்டையிலே புண்!''

''எனக்குச் சொத்தைப் பல்!''

''எனக்குப் பிளட் பிரஷர்!''

''எனக்கு டயாபெடிஸ்!''

ஆளுக்கொரு காரணம் கிளம்பியது. கோயில் குருக்கள் ஓடிவந்தார். பேதை, அவர், கண்களிலே கண்ணீர் பெருகியது.

''அம்மா தாயே! உன் கோயிலில் இப்படியா நடக்கணும்!..... சார் ..... நான் ஒண்ணு சொல்ல ஆசைப்படறேன்!''

''சொல்லய்யா சீக்கிரம். என்ன விஷயம்?''

''என் தகப்பனார் வயது தொண்ணூறு. உடம்பு முடியாமல் வீட்டிலே படுத்திருக்கிறார். அவரை யாராவது இரண்டு பேர் போய்த் தூக்கி வாருங்க!''

''இங்கே அய்யா வாய்ப் பிராணன் போய்க்கிட்டிருக்கு. அந்தக் கிழவர் வந்து என்னய்யா செய்யப் போறாரு?'' போலீஸ் வெடி.

''அவருக்குப் பாம்புக் கடி மந்திரம் தெரியும் அய்யா!''

''அப்படியா? ஓடு ஓடு — யார்ரா அங்கே? ஓடடா குருக்களய்யா வீட்டுக்கு!''

## 4

இரண்டு பேருக்கு நாலு பேரா ஓடினார்கள். தொண்டு கிழவர். கண்களிலே மங்கலான ஒளி. முகமெல்லாம் சுருங்கி வெண் தாடி. அழுக்குத் துணி. பழைய பூணூல். நடுங்கும் தேகம்! மெதுவாக அவரை மந்திரியின் அருகில் உட்கார வைத்து விஷயத்தைச் சொல்லிப் புரிய வைத்தனர்.

''எப்போ கடிச்சது, என்ன பாம்பு?''

''கருநாகம் சாமி, இப்பத்தான் சாமி. ஒரு பத்துப் பதினைஞ்சு நிமிஷம் ஆயிருக்கும்!''

''அவ்வளவுதானே? அப்போ பயமில்லே. டேய், இங்கே வாடா'' — தம் பிள்ளையை அழைத்தார்.

''சந்நிதிக்குப் போய்க் கொஞ்சம் குங்குமம், விபூதி கொண்டா! ஓடு, சீக்கிரம்! கொஞ்சம் ஜலம் எடுத்து வா!''

குருக்கள் பதறிக்கொண்டே போனார். அவர் திரும்ப மூன்று நிமிஷங்கள் கழிந்தன.

பெரியவர் மந்திரியிடம் குனிந்து அவருடைய கண்களைக் கூர்மையாகப் பார்த்தார். கொஞ்சம் சாராய வாசனை வீசியது. தம் பிள்ளையின் காதில் ரகசியமாகச் சொன்னார்: ''இவரிடம் ஏதோ வாசனை வீசறது. போதைப் பொருள் உள்ளே இருந்தால் விஷம் இறங்கறது கஷ்டம்!''

''பரவாயில்லே அப்பா — அம்பாள் பேரில் பாரத்தைப் போட்டு மந்திரித்துப் பாருங்கள். மந்திரியின் உயிர் பிழைக்க வேண்டியது அவசியம்!''

''சரி, நீங்கள் கொஞ்சம் அந்தப் பக்கம் விலகி நில்லுங்கள்.''

அந்தத் தொண்டு கிழவரை மதித்து எல்லாரும் விலகினர். தமது மகனை மட்டும் அருகில் வைத்துக் கொண்டு விபூதியையும் குங்குமத்தையும் மாறி மாறி எடுத்து நெற்றியில் இட்டு ஜலத்தினால் தம் சிரசைப் புரோட்சித்துக் கொண்டார்.

''இதெல்லாம் என்ன குருட்டுத்தனம், மூட நம்பிக்கை'' என்று அப்போது யாரும் நினைக்கவில்லை. மிகவும் பயத்துடன், சிரத்தையுடன், மரியாதையுடன், ஆவலுடன் அந்த முதியவரைக் கூட்டம் பார்த்தது; மந்திரி உட்பட. போலீஸ் அதிகாரிகளுக்கும் அந்த விசித்திர நிலையில் அதிகார நினைவுகள் ஏதும் எழவில்லை.

'' இவாள் எல்லாம் எதுக்கு வந்தா இங்கே?'' கிழவர் கேட்டார்.

''கோயில்லே தமிழ் அர்ச்சனை தொடங்கி வைக்க வந்தார். வந்த இடத்தில் இப்படி ஆயிடுச்சு!''

''ஓ! செய்ய வேண்டியதுதான். என் தாய்க்கு எப்படிச் சொன்னால் என்ன? பக்தி தானே அவளுக்கு வேண்டும். இருந்தாலும் பிரணவ ஓங்காரத்தை நாம் விடப்படாது. அதுதான் மந்திரப் பிரபஞ்ச ஜீவன்!... என்ன செய்யறது? எனக்குத் தெரிஞ்சது சம்ஸ்கிருதம்தான்!''

''பரவாயில்லீங்க. நீங்க சீக்கிரம் மந்திரிச்சுடுங்க சாமி! ஆபத்துக்குப் பாவமில்லீங்க!''

கடைசி முறையாக மந்திரி கண்களை விழித்துப் பரிதாபமாக அந்த வயோதிகரைப் பார்த்தார். மெதுவாகக் கையைத் தூக்கி வணங்கினார்.

என்ன அதிசயம்! அந்தத் தொண்ணூறு வயது மனிதருக்குத்தான் எத்தனை உரத்த குரல்! மந்திரியின் காலடியில் பத்மாசனம் போட்டு அமர்ந்து, ஜலத்தைக் கையில் எடுத்துத் தெளித்து, குங்குமம் விபூதி கொண்டு ஜெபிக்கத் தொடங்கினார். முதலில் மூச்சை அடக்கிப் பிராணாயாமம் செய்தார். அவருடைய கண்டத்திலிருந்து எழுந்த ஒலி அந்தப் பிராகாரத்தில் எதிரொலித்தது. கண்களை மூடி, பார்வையைச் சிவமைய ஸ்தானத்தில் செலுத்தி ஜெபித்துக் கொண்டே இருந்தார்.

ஆனால் மந்திரியின் மூடிய கண்கள் திறக்கவில்லை. வாயில் நுரை அதிகமாயிற்று. மாநிற உடலில் நீலம் பாயத் தொடங்கியது.

கூடியிருந்தவர்களிடையே சலசலப்பு.

''வேறு ஏதாவது செய்து பார்க்கலாமே! ரொம்ப சீரியஸாகப் போவுதே!''

''சத்தம் வேண்டாம்!'' என்று கைஜாடை காட்டினார் கிழவர்.

மேலும் பத்து நிமிஷங்கள் ஆயின. மந்திரித்து முடித்தவர் தம் வேஷ்டியின் ஓரத்தில் கொஞ்சம் கிழித்து எடுத்தார். ஜலத்தில்

# இலவசம்

ஒவ்வொரு
175 கிராம் டின்னுடனும்
300 கிராம் சர்க்கரை

ஒவ்வொரு 50 கிராம்
ஜாடியுடனும்
ஒரு 95 கிராம்
பார்லே குளுகோ
பிஸ்கட் பாக்கெட்







ரிக்கரி®
இன்ஸ்டன்ட்
-விசேஷச் சுவை கொண்டஸ்பெஷல் காபி

இச்சலுகை,
சரக்குகள்
உள்ளவரை
மட்டுமே!

HRCM.3 TAM

அதை நனைத்து எடுத்து மந்திரியின் கரத்தில் முறுக்கிக் கட்டினார். பிறகு ஆயாசம் மேலிட உடல் தளர்ந்து ஜமுக்காளத்தில் சாய்ந்து விட்டார். அவருக்கு ஒன்றும் இல்லை. ஆயாசம்; தள்ளாமை. அவ்வளவுதான்.

கண்களை விழித்துப் பார்த்தார். "எனக்கு ஒன்றும் இல்லை. நீங்கள் எல்லோரும் தூரப் போய்விடுங்கள்" என்று உரத்துக் கத்தினார்.

"ஐயா பிழைப்பாரா?"

டாக்டர் மந்திரியை நெருங்கிச் சோதித்துப் பார்த்தார். தயக்கத்துடன் உதட்டைப் பிதுக்கினார். கூட்டத்தில் எல்லோர் முகத்திலும் சவக்களை.

## 6

போலீஸ் வயர்லெஸ் மூலம் அனுப்பப்பட்ட செய்திக்குப் பதிலாக உடனே கிளம்பி வருவதாக முதலமைச்சர் தெரிவித்தார். பிரபல வைத்தியர் குழு ஒன்றும் அவருடன் வருவதாகத் தெரிவித்தார். ஆனால் அவர்கள் வந்து சேரச் சுமார் மூன்று மணி நேரம் ஆகும்! அதற்குள் என்ன ஆகுமோ!

மந்திரி மரித்தால் மேற்கொண்டு செய்ய வேண்டிய உத்தியோக காரியங்கள் என்ன என்பதைத் தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தார் போலீஸ் அதிகாரி.

மேலும் பத்து நிமிஷங்கள் கழிந்தன. கிழவரின் விருப்பத்தின் பேரில் அவரையும் மந்திரி கிடந்த இடத்திலிருந்து சிறிது தூரத்தில் எடுத்துச் சென்று சுவர் ஓரமாகச் சாய்வாக உட்கார வைத்தார்கள்.

மந்திரி மட்டுமே அந்தச் சிறு பந்தலில் படுக்க வைக்கப் பட்டிருந்தார். அவருக்குச் சற்றுத் தொலைவில் விளக்கு. தூரத்தில் எங்கோ ஒரு மரத்திலிருந்து கோட்டான் கத்தும் ஒலி மட்டுமே கேட்டது.

அடுத்த கணம் கூட்டத்தில், ஒரு பாம்பு!

"அதோ, ஓடு சீக்கிரம் விடாதே. பிடி! அடி! கொல்லு!" என்று கூக்குரல் எழுந்தது. ஆனாலும் யாரும் நகரத் துணியவில்லை.

இடுங்கிய கண்களால் அந்த இடத்தை உற்றுப் பார்த்தார் கிழவர்.

ஒரு பெரிய கருநாகம். மெதுவாக மந்திரியிடம் ஊர்ந்து வந்து கொண்டிருந்தது.

கலவரப்பட்ட கூட்டத்தை நோக்கினார், பெரியவர்.

"என் அப்பன் நாகராஜன்! அவனை யாரும் நெருங்காதீர்கள். அவன் யாரையும் ஒன்றும் செய்ய மாட்டான்!" இந்த வார்த்தைகளை அவர் முடிக்கு முன்பே பாம்பு மந்திரியின் கால்புறம் நெருங்கிப் படமெடுத்து இரண்டு முறை தலையை அசைத்தது. மறுகணம் ஒரே போடு! மந்திரியின் காலைத் தீண்டிவிட்டது மறுபடியும்! கூட்டம் நடுங்கியது.

"அப்பனே போய்விடு! என் ராஜா போய் விடு!"

அவ்வளவே! தன் வேலையை முடித்துக் கொண்டு திரும்பி வேகமாய் ஓடிப் போயிற்று.

தம்மை மறுபடியும் மந்திரியிடம் கொண்டு விடுமாறு கிழவர் கேட்டுக் கொண்டார்.

சில நிமிஷங்கள் கழிந்தன. டாக்டர் உமாபதியைத் தம் அருகில் வருமாறு அழைத்தார்.

அவர் நடுநடுங்கி நெருங்கினார்.

### மரியாதை கற்பித்தார்!

★ செம்மை கச்சேரி. ஆரம்பித்து அரை மணி நேரம்தான் ஆகியிருக்கும். அதற்குள் முன் வரிசையில் இருந்த ஒரு பிரமுகர் எழுந்து வெளியே போவதற்குக் கிளம்பினார். உடனே செம்மை "ஓய்! நீர் க்ஷீரஸாகர பாடவேண்டும் என்று கேட்டிருந்தீரே. அதைக் கேட்காமல் போகிறீரே!" என்று சொன்னார்.



பிரமுகருக்கு ஒன்றும் விளங்கவில்லை. திருதிருவென்று விழித்தவர் பேசாமல் உட்கார்ந்து விட்டார். சபையில் ஒரே சிரிப்பு. சுமார் ஒரு மணி நேரத்துக்குப் பிறகு 'க்ஷீரஸாகர' பாடிவிட்டு அவரிடம், "போகலாம்" என்று செம்மை சொன்னார். ஆனால் அவர் கச்சேரி முடியும்வரை இருந்து கேட்டு விட்டுத் தான் போனார்!

லக்ஷ்மி அனந்தராம், திருவனந்தபுரம்



மந்திரியின் நாடியைப் பிடித்துப் பார்த்தார். ஒன்றும் புரியவில்லை. மந்திரி மரக் கட்டையாகவே இருந்தார்.

கிழவர் சிறிது விபூதி எடுத்து மந்திரியின் நெற்றியிலும் கடிபட்ட இடத்திலும் வைத்துக் கண்களை மூடித் தியானித்தார்.

சில நிமிஷங்கள்—

மந்திரி லேசாகக் கண் விழித்தார். தாகம் என்று சைகை காட்டினார். வாயைத் திறந்து திறந்து தண்ணீர் அருந்தினார்.

மேலும் சில நிமிஷங்கள்.

எழுந்து மெதுவாக உட்கார்ந்தார். கூட்டம் அவரை நெருங்கி வந்தது.

"என்ன ஆச்சு?"

போலீஸ் அதிகாரி சொன்னார்: "சார்! இங்கே சற்று முன்பு நம்ப முடியாத நிகழ்ச்சி நடந்து விட்டது. நீங்கள் மரணத்திலிருந்து தப்பி எழுந்தீர்கள். இந்தக் கிழவர் உங்களைக் காப்பாற்றி விட்டார்!"

"ஓ!"

மந்திரி மெதுவாக எழுந்தார். அருகிலிருந்த தம் நண்பரிடமிருந்து ஒரு நூறு ரூபாய் நோட்டை வாங்கி அந்தப் பெரியவரிடம் அளித்தார். மந்திரியின் கண்களில் நீர் கசிந்தது. கூட்டத்தில் சிலர் கண்களைத் துடைத்துக் கொள்ள, பெரியவர் "எனக்கு எதற்குப் பணம் அய்யா? இது தெய்வ காரியம்! பணத்தினால் இதற்கு மதிப்புப் போடக் கூடாது. அது பாவம். இருந்தாலும் உங்கள் நன்றியின் அடையாளமாக இந்தப் பணம் அம்பாளுக்குச் சேரட்டும்" என்று தம் மகனிடம் கொடுத்தார். குருக்கள் அதை வாங்கிக் கோவில் உண்டியில் சேர்த்தார்.

வாசலில் சில கார்கள் வந்து நின்ற சத்தம் கேட்டது. போலீஸ் சல்யூட். முதல் மந்திரியும் நாலு டாக்டர்களும் பரபரப்புடன் ஓடி வந்தனர். மந்திரி "ஒன்றுமில்லை. எல்லாம் சரியாகி விட்டது!" என்றார்.

"யார் இந்தக் கிழவர், போங்கய்யா தூர" என்று முதல் மந்திரி அதட்டினார். பின்னால் விஷயமறிந்து வருத்தம் தெரிவிக்க முதல்வர் கிழவரைத் தேடியபோது அவர் மதிலோரமாக மூர்ச்சையாய்க் கிடந்தார்!



# பொன்னியின்

## 21. 'கல்கி'யின் கல்யாணம்

நாலு நாட்களும் ஊராருக்கெல்லாம் சாப்பாடு போடுவதில், பணக்கார வீட்டுக் கல்யாணத்துக்கும் சாதாரண வீட்டுக் கல்யாணத்துக்கும் அதிக வித்தியாசம் கிடையாது. கல்கியின் கல்யாணத்துக்கு ஊரடைத்துப் பந்தல் போட்டிராவிட்டாலும், பக்கத்து வீடுகளையும் எதிர் வீடுகளையும் அடைத்துப் பெரிய பந்தலாகவே போட்டிருந்தது. தங்க நாயனமோ, இரட்டை நாயனமோ இல்லாவிட்டாலும், நல்ல ஒற்றை நாயனம் இருந்தது. தோரண அலங்காரங்களுக்குக் குறைவு ஒன்றும் கிடையாது.

ஒரு மாதத்துக்கு முன்னுலேயே, தமது பெரியம்மா கீரனூரிலிருந்து ஒரு வண்டி நிறைய உணவுச் சாமான்களுடனும், ஒரு பசுமாடு எருமை மாட்டுடனும் வந்து விட்டார் என்று ருக்மிணி அம்மாள் சொன்னுர். மற்ற உறவினர்களும் அடுத்தடுத்து வந்து சேர்ந்தார்கள். மாவு எந்திரம் சுற்றிக் கொண்டே இருந்ததாம்! ஆட்டுரல் ஆடிக் கொண்டே இருந்ததாம்; எண்ணெய்ச் சட்டி கொதித்துக் கொண்டே இருந்ததாம். இடிப்பும், புடைப்பும், புகையும் கூச்சலும் - இத்தனை பாடா ஒரு கல்யாணத்துக்கு என்று தோன்றியதாம்.



அந்தக் காலத்துக் கல்யாணங்கள் பலவற்றில் சம்பந்திச் சண்டை என்பது ஓர் இன்றியமையாத அம்சம். கல்கியின் கல்யாணத்திலும் ஒரு சண்டை மூண்டது. ஆனால் அதைக் கல்கி முளையிலேயே கிள்ளி அடக்கி விட்டார். ஜானவாஸ ஊர்வலத்துக்கு நாலே நாலு காந்த விளக்குகள் மட்டுமே இருந்ததைக் கண்ட பிள்ளை வீட்டாரின் உறவினர்கள், அதைச் சண்டைக்குச் சாக்காய்க் கொண்டு கூச்சலிட்டார்கள். அதைக் கேட்ட கல்கி கோபத்துடன் எழுந்து நின்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தார்: ''என்னைப் பார்ப்பதற்கு இந்த நாலு விளக்குகளே போதும். இப்படிக் கூச்சல் போடும் உங்களைப் பார்ப்பதற்கும் போதும். நாலுகூட வேண்டாம்! ஒரு விளக்கே போதும்! இந்த வெட்டிச் சம்பந்திச் சண்டைகளை என்னால் பொறுக்கவேமுடியாது. இது இல்லை, அது இல்லை, இது வேண்டும் அது வேண்டும் என்று யாரும் மூச்சுப் பேச்சுக் காட்டக் கூடாது. காட்டினால், கல்யாணமே வேண்டாம் என்று போய் விடுவேன்''

இதைக் கேட்டுப் பிள்ளை வீட்டார் ஏமாறிப் போனார்கள், பெண் வீட்டாருக்கோ ஒரே ஆனந்தம்.

அந்த வட்டாரத்தில் கதராடை அணிந்து ஊர்வலம் சென்ற முதல் மாப்பிள்ளை கிருஷ்ணமூர்த்திதான். பாப்ளின் அல்லது ட்வீட் மாப்பிள்ளைகளைக் கண்டு பழக்கப்பட்ட கண்களுக்கு அவருடைய கதர்க்கோலம் என்னவோ போல் இருந்தது. அதுவும் அக்காலத்துக் கதர், சாக்குத் துணி போல் இருக்கும். அந்த முரட்டுத்துணியிலேதான் வேஷ்டி, சட்டை, அங்கவஸ்திரம் எல்லாம்.

ஜானவாசத்தின் போது சலசலப்பு உண்டான அதே சமயத்தில், கல்யாண வீட்டுக்கு உள்ளே ஒரு நெருக்கடி நேர்ந்தது. கல்யாணத்துக்கு அமர்த்தப்பட்டிருந்த சமையல்காரர்களுக்கு அப்போதுதான், பிள்ளை வீட்

★ ஊஞ்சலின்போது மாப்பிள்ளை தமது ஊஞ்சலாட்ட ஆசை காரணமாகக் கொஞ்சம் வேகமாகத் தாமே அதை ஆட்ட முற்பட்டுக் கேலிக்குள்ளானார்!







# புதல்வர்

சுந்தா



★ ஜானவாஸ ஊர்வலத்தின்போது கல்கி கோச்சில் எழுந்து நின்று ஒரு குட்டிப் பிரசங்கமே செய்தார்.

டார் தமது தாரத்து பந்துக்கள் என்று தெரிய வந்தது. ''நாங்கள் அவர்களுக்குச் சமைத்துப் போடுவது கேவலம்'' என்று சொல்லி, ஆரம்பித்திருந்த சமையலை அப்படி அப்படியே நிறுத்தி விட்டு ஓடி விட்டார்கள். வேறு சமையல்காரர்களை மறுநாள் தான் ஏற்பாடு செய்ய முடியும். அன்றிரவுச் சமையலுக்கு என்ன செய்வது? கல்யாணப் பெண்ணைத் தவிர, அவள் வீட்டுப் பெண்டுகளும், ஊர்ப் பெண்டுகளுமாகச் சேர்ந்து கடா அடுப்பருகில் பாய்ந்து பரக்கப் பரக்கச் சமையலைச் செய்து முடித்தார்கள். பெண்கள் அப்படிச் சமாளித்ததைக் கிருஷ்ண மூர்த்தி கேள்விப்பட்டதும் பலலக்கு மேல் பலலை போட்டுப் பாராட்டினார்.

முகூர்த்தத்தின் போது, வழக்கமான பட்டுக்கரை வேஷ்டிக்குப் பதிலாகப் பழுக்காய்க் கரை போட்ட முரட்டுக் கதரிலேயே மாப்பிள்ளை பஞ்சகச்சம் அணிந்திருந்தார். முதல் நாள் மாலை யாரோ புனைந்து சில பேரிடையே பரவிய ''கதர் மாப்பிள்ளை'' என்ற பெயர், அப்போது எல்லாரிடையேயும் பரவி விட்டது.

மாலை மாற்றுகையில், பெண் வீட்டைச் சேர்ந்த வாயாடி மாமி ஒருத்தி, ''மாப்பிள்ளை இன்னும் கொஞ்சம் உயரமாக இருந்திருக்கலாம்'' என்று சொன்னாள். அதைக் கேட்ட பிள்ளை வீட்டு மாமி ஒருத்தி '' ஏன் பெண் தான் இன்னும் கொஞ்சம் குட்டையாய் இருந்திருக்கலாமே'' என்று பதில் கொடுத்தாள்.

ஊஞ்சலின் போது மாப்பிள்ளை, சும்மா பெயருக்கு அதில் உட்கார்ந்திராமல், தமது ஊஞ்சலாட்ட ஆசை காரணமாய், கொஞ்சம் வேகமாய்த் தாமே அதை ஆட்ட முற்பட்டுக் கேலிக்கு ஆளானார்.

★ கல்கியின் திருமணப் புகைப்படம் இல்லாத குறைக்கு அவர் மகள் ஆனந்தியின் கல்யாணப் படத்தைப் பார்ப்போம்! மனைவியார் உடனிருக்க, மடியிலிருக்கும் மகளைத் திரு ராமச்சந்திரனுக்குக் கன்னிகாதானம் செய்துவிக்கிறார் கல்கி.







மணையில் அமர்ந்த மாப்பிள்ளை, புரோகிதர்களைப் படுத்தி வைத்தார். மந்திரங்களை ஓட்டாமல் நிதானமாய்ச் சொல்லிக் கொடுக்கச் சொன்னார். சரியாகக் காதில் விழாவிட்டால், மீண்டும் சொல்ல வைத்தார். கேட்கும் மந்திரங்களை அழுத்தம் திருத்தமாயும் உரத்த குரலிலும் திரும்பிச் சொன்னார். ஊடே ஊடே, இதற்கு என்ன அர்த்தம், அது என்ன சம்பிரதாயம் என்றெல்லாம் கேள்விகள் கேட்டார். எல்லாவற்றிற்கும் சாஸ்திரிகளுக்கு அர்த்தமோ விளக்கமோ சொல்லத் தெரியுமா என்ன? ஏதோ சொல்லி மழுப்பினார்கள். அல்லது ''எல்லாம் அப்புறம் சொல்கிறோம், முகூர்த்த வேளை தப்பிவிடப் போகிறது' என்று அவசரப்படுத்தித் தாம் தப்பிக்கப் பார்த்தார்கள். மாங்கல்ய தாரணம் முடிந்ததும், ''அப்பாடா தப்பித்தோம்'' என்று பெண் வீட்டு வாத்தியார் சொல்ல, ''இன்னும் மந்திர தந்திரங்கள் இருக்கேங்காணும்'' என்று பிள்ளை வீட்டு வாத்தியார் சொன்னார்.

காலையில் சாப்பிட்ட இட்டிலிகள் ஜரிக்காத நிலையிலும், மத்தியானச் சாப்பாட்டுக்கு எப்போது இலை போடப் போகிறார்கள் என்று காத்திருந்த வீணர்கள் சிலர், கல்யாண இரைச்சலைப் பயன்படுத்திக் கொண்டு, மாப்பிள்ளையின் தகுதிகளைப் பற்றி வம்பளந்து கொண்டிருந்தார்கள்.

''இந்தக் கதர் மாப்பிள்ளை ஒரு வருஷம் ஜெயில்லே இருந்திருக்கான், தெரியுமோ ஓய்!''

''அதுவும் எப்படி, கைவிலங்கு கால் விலங்கு மாட்டி வச்சிருந்தாளாம்.''

''இப்படிக் காந்திக்காக ஜெயிலுக்குப் போனதை ரொம்பப் பெருமையாகச் சொல்லிக்கிறளேங்காணும்!''

''என்னங்காணும் பெருமை வேண்டியிருக்கு! கண்டவன் சமைச்ச களியைத் தின்னுண்டு, கல்லை உடைச்சுண்டு!''

''ஜெயில் தீட்டையும் பாபத்தையும் போக்கிக்கறத்துக்காக ராமேச்வரம் போய்ப் பிராயச்சித்தம் செஞ்சிண்டாச் சாம்.''

''இதிலே எல்லாம் மட்டும் நம்பிக்கை இருக்காக்கும் இவனுக்கு!''

''இருக்கோ இல்லையோ, தாயாரைத் திருப்திப் படுத்தறத்துக்காகச் செஞ்சுண்டாளும்.''

''இதோடே போச்சாங்காணும்? சுயராஜ்யம் கிடைக்கிற வரை திரும்பத் திரும்ப ஜெயிலுக்குப் போயிண்டே இருப்பானே!''

''இந்தக் காந்தியாலே எப்படி ஓய் வெள்ளைக்காரனை விரட்ட முடியும்?''

''கைராட்டினத்தைச் சுற்றியே விரட்டிப் புடலாம் என்கிறாராம்.''

''போயும் போயும் இந்தக் காந்திக் காரப் புள்ளையையா நம்ம ராமசாமி பிடிச்சார்!''

''அவர் என்னங்காணும் பிடிக்கிறது. விதி அப்படிப் பிடிச்சுப் போட்டிருக்கு.''

''இப்போ இவன் பட்டணத்திலே ஏதோ நல்ல வேலை பார்க்கிறானமே?''

''நல்ல வேலையாவது ஒண்ணாவது! யாரோ ஒரு முதலியார் ஏதோ ஒரு பேப்பர் போடறாராம். அதிலே இவன் ஏதோ வேலை பார்க்கிறானும்.''

''கதை கிதை எல்லாம் எழுதறானமே?''

''இதெல்லாம் என்ன வேலைங்காணும், ஆத்த மாட்டாமல்.''

''இவன் சின்னவனா இருந்தப்போ கதாக் காலட்சேபம் செஞ்சுண்டிருந்தான், தெரியுமோ!''

''அப்படியே செஞ்சிண்டிருக்கப்படாதோ, புண்ணியமாவது உண்டே.''

''அப்பவும் நம்ம வாய் சும்மா இருக்காது ஓய்! போயும் போயும் ஒரு பாகவதருக்கா பெண்ணைக் கொடுக்கிறார்னு சொல்லுவோம்.''

''சொல்லத்தான் சொல்லுவோம். சர்க்கார் வேலைக்கு ஈடா ஒண்ணுமே இல்லை. சின்ன வேலையா இருந்தாலும், மாசம் பிறந்தா டாண் டாண்ணு சம்பளம் கிடைக்குமே ஓய்!''

''அப்புறம் மேல் வரும்படியும் கிடைக்கும், வயசு காலத்துக்குப் பென்ஷனும் கிடைக்கும்...''

இந்த வம்புப் பேச்செல்லாம் எட்டாத தொலைவில், கல்கியின் நண்பர்கள், ஆர். கே. சுப்பிரமணியமும் முத்துக்கிருஷ்ணனும் அருகருகே உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் அய்யாசாமி அய்யர். தமது செல்ல மாணக்கன் கல்யாணத்துக்கு அவனுடைய உயிர்த் தோழர்கள் இருவரும் வந்தது பற்றி அவருக்கு மகிழ்ச்சி. அதுவும் இராமகிருஷ்ணமடத்தில் சேர விருந்த தருவாயிலும், முத்துக்கிருஷ்ணன் வந்ததில், மேலும் மகிழ்ச்சி. தமது உணர்ச்சிகளை அவர் நொடிக்கொரு தரம் அவர்களிடம் சொல்லிக் கொண்டேயிருந்தார். கல்யாண மாப்பிள்ளையோ, மந்திரங்களுக்கும் குறுக்குக் கேள்விகளுக்கும் இடையே, அவர்களைப் பார்த்துப் பார்த்துப் புன்னகை செய்த வண்ணம் இருந்தார்.

ஆசீர்வாதத்தின் போது, அய்யாசாமி அய்யர் சம்பிரதாயப்படி பணம் ஓதியிட்டார். அது எவ்வளவு என்று அண்ணா வேங்கடராம அய்யருக்கு ஞாபகம் இல்லை. ஆனால் அவர் ஆனந்

# சிங்கப்பூருக்கும், அதற்கப்பாலும் சென்றிட சிறப்பான ஸர்விஸ்

வெள்ளி பகல் 11-30 மணிக்கு சென்னையிலிருந்து புறப்பாடு—
தொடர்ந்து ஸிட்னி அல்லது மெல்போர்ன் அல்லது பெர்த். மீண்டும், ஞாயிறு பகல் 1–10—
தொடர்ந்து ஸிட்னி, மெல்போர்ன்.

சுகபோகமுடன் உமக்கென்றே பறப்பவை எங்கள் B747*, B707 சூப்பர்ஜெட்டுகள்;
பணிவிடையின் தரமோ இதர ஏர்லைன்களையும் வியக்கவைக்கும்.

சிங்கப்பூரிலிருந்து பெர்த் நகருக்கு வாரம் 3 முறைகள்;
ஸிட்னிக்கு 6, மெல்போர்னுக்கு 4.

கோலாலம்பூருக்கும் எல்லா இணைப்புகள் உடனுக்குடன் உண்டு;
இந் நகரங்களுக்கும் வசதியான இணைப்புகள் : ஜகார்ட்டா,
பேங்காக், ஹாங்காங், டெய்பெய், டோக்கியோ,
ஒஸாகா, மணிலா.

சிங்கப்பூர் ஏர்லைன்ஸ்
வான வீதியிலே உபசரிப்போர் இலக்கணம்



*சிங்கப்பூரிலிருந்து.

எஸ்ஐஏ, நரிமன் பாயிண்ட், பம்பாய்-400 021. போன்: 250951. டெலெக்ஸ்: 011–3887.
எஸ்ஐஏ, 36D, மவுண்ட் ரோடு, சென்னை-600 002. போன்: 811789, 83917, 83840. டெலெக்ஸ்: MS 7278.

137 BR TM



பம்பாய் Deputy A. I. G. of Police ஸ்ரீ K. Y. மகாதேவன் அவர்கள் குமாரி செள. பானுவுக்கும், ஸ்ரீ M. V. சுப்பிரமணியன் அவர்கள் குமாரரும், பிரபல தொழிலதிபரான காலஞ்சென்ற ஸ்ரீ C. ராஜம் அவர்களின் கொள்ளுப் பேரனுமான சிரஞ்சீவி S. V. ராமன், B. Com., A.C.A., A.I.C., W.A., அவர்களுக்கும் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!



செள. மாலதி, B.Sc., சி. கிருஷ்ணமூர்த்தி B.Com.

மதுரை சென்ட்ரல் எக்ஸைஸ் இன்ஸ்பெக்டர் திரு எஸ். பீமாராவ் அவர்களது குமாரத்தி செள. மாலதிக்கும், காரைக்குடி ஸ்டேட் பாங்க் ஆபீசர் திரு கே. ராமா ராவ் அவர்களது குமாரரும், ஈரோடு ஸ்டேட் பாங்கில் பணிபுரிபவருமான திரு கிருஷ்ணமூர்த்திக்கும் டிசம்பர் 1ம் தேதி திருமணம் மதுரையில் வெகு விமரிசையாக நடைபெற்றது. திரு பீமாராவ் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி குருராஜன் B. Sc., (Ag.)க்கு உபநயனமும் நடைபெற்றது. உயர் அதிகாரிகளும், நண்பர்களும், உறவினர்களும் வந்திருந்து தம்பதிகளையும், வடுவையும் ஆசீர்வதித்தனர்.

தக் கண்ணீருடன் கிருஷ்ணமூர்த்தியைக் கட்டி அணைத்துக் கொண்டது மட்டும் நினைவில் நின்றது.

சிவப்புக் கல் பதித்த மோதிரம் ஒன்றைச் சுப்பிரமணியம் தாமே நண்பனுக்கு அணிவித்துக் கைகுலுக்கினார்.

முத்துக்கிருஷ்ணன் என்ன கொடுத்தார்? இத்தனை காலத்துக்குப் பிறகு அவருக்கு நினைவில்லை. ஆனால், அப்போது நண்பனுடன் நடந்த பேச்சு மட்டும் ஓரளவு நினைவில் இருக்கிறது.

''உன் கல்யாணத்துக்கு வரணும்னு தான் மடத்துக்குப் போறதை ஒத்திப் போட்டேன்.''

''என்னைச் சம்சார சாகரத்தில் தள்ளிட்டுப் போகணும்னு காத்திருந்தையாக்கும்!''

''அப்படி இல்லே, கிருஷ்ணமூர்த்தி! நம்ம எண்ணம், முயற்சி எல்லாம் இருந்தாலும், ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு வழி வகுத்து வைச்சிருக்கு. உனக்கு இது, எனக்கு அது.''

''நம்ம சிநேகிதம் இதோடு நின்னுடாதே?''

''ஏன் நிக்கணும்? நீ சம்சாரியா ஆயுட்டாலும், நான் சாமியாராய்ப் போனாலும், நம்ம சிநேகம் இப்படியே தான் இருக்கும், பாரேன்...''

தமக்குக் கல்யாணம் ஆகிப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆன பிறகு, கல்யாணப் பிரச்னைகள் பற்றிய ஒரு கட்டுரையில் கல்கி எழுதினார்:—

விவாக முறையில் எவ்வளவு குறைபாடுகள் இருந்தாலும், இல்வாழ்க்கைதான் ஜீவர்களுடைய இயற்கை. இல்வாழ்க்கையில்தான் மனிதனுடைய வாழ்வு பூர்ணமாகிறது. எவ்வளவு குறைபாடுள்ள இல்வாழ்க்கை நடத்தியவர்களானாலும் அதன் மேன்மையையும் உணர்ந்தே இருப்பார்கள். ஆகையினால் தான், அநேகமாய்ப் பெற்றோர்கள் அனைவரும் தங்கள் பிள்ளைகளுக்கு மணம் செய்து வைப்பதில் அவ்வளவு கவலை காட்டுகிறார்கள்... சம்சாரசாகரத்தில் கண்ணைக் கட்டிக்கொண்டு தொப்பென்று விழ வேண்டாம். கண்ணைத் திறந்து கொண்டு அதிலுள்ள இன்ப துன்பங்களை யெல்லாம் அநுபவிக்கச் சித்தமாக இறங்குங்கள் என்பதுதான் என் யோசனை.

(ஆ. வி. 16-2-36)

தேசிய இயக்கத்தில் ஈடுபட்டவரும், முப்பது வயது வரை பிரம்மச்சாரியாய் இருந்தவருமான நண்பர் ஒருவருக்கு, கல்யாணம் பற்றிய தமது கருத்துக்களைத் தெரிவித்துக் கல்கி ஒரு கடிதம் எழுதி



''இப்பத்தானே கல்யாணம் ஆகி யிருக்கு. அடுத்த வருஷம் உங்களுக்கும் இதுபோல ஒரு குழந்தை பிறந்திருக்கும்'' என்கிறாரா பிரஸன்னா? படத்தில் பிரஸன்னாவின் குழந்தையைத் தூக்கி வைத்துக்கொண்டு விளையாடுபவர் காவல்கர். ஸ்ரீமதி மாக்ஷ்வெல் காவல்கர் சித்திரத்தில் எம். ஏ. பட்டதாரி.

யிருந்தார். அந்த ஆங்கிலக் கடிதத்தின் தமிழாக்கம்:

மற்றவர்களின் சொந்த விஷயங்களில் நான் குறுக்கிடுவதில்லை என்பது உங்களுக்குத் தெரியும். ஆனாலும், உங்கள் பெற்றோரின் மன நிலையைச் சற்று அறிய நேர்ந்ததில், வழக்கத்துக்கு மாறாக இதை எழுதலானேன். உங்களுடன் வாதாட விரும்பவில்லை; ஆயினும், உங்கள் பெற்றோரின் மனம் நோகும்படியாக நீங்கள் நடந்து கொள்வது கொஞ்சமும் சரியல்ல என்று நிச்சயமாகச் சொல்லுவேன். எல்லாரிடமும் இதமாயும் அன்புடனும் பழகும் நீங்கள், உங்கள் பெற்றோரிடம் மட்டும் இப்படிக் கொடூரமாய் இருப்பது கண்டு வேதனைப்படுகிறேன்.

பின்வரும் மூன்று வழிகளில் ஏதாவது ஒன்றின்படி, நியாயமான யாரும் நடந்து கொள்ள வேண்டியதாகும்.

1. பெற்றோர்கள் பார்த்து நிச்சயிக்கும் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வது. இதற்கென, திருமணம் பற்றிய சொந்த அபிப்பிராயங்களை விட்டுக் கொடுக்க நேர்ந்தாலும் பாதகம் இல்லை.

2. தான் விரும்பும் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வது. அவள் வேறு ஜாதிப் பெண்ணாய் இருந்தாலும் பாதகம் இல்லை. முதலில் பெற்றோர்கள் வருத்தப்பட்டாலும், நடந்தது நடந்து விட்டது என்று பின்னர் மனத்தைத் தேற்றிக் கொள்வார்கள். கல்யாணமே செய்து கொள்ளாமல் அவர்களை வருத்தப்படுத்துவதை விட இது மேல்.

3. கல்யாணம் செய்து கொள்ளாமல் இருப்பதற்குத் தக்க காரணம் இருந்தால் அதை அவர்களுக்குத் தெளிவாய்ப் புரிய வைத்து, தன் நிலையை அவர்கள் ஒப்புக் கொள்ளும்படி செய்வது.

இந்தக் கடிதத்துக்கு உரிய நண்பர், சிறிது காலத்துக்குப் பிறகு, தாம் வரித்த துணைவியைக் கல்யாணம் செய்து கொண்டு, இனிதாக இல்வாழ்க்கை நடத்துகிறார். (தொடரும்)

# What do seven different tyre companies have in common?




That's it. Nircord - India's first nylon tyre cord.
Nircord is the super-strengthener for all better-grade tyres made in India today.

**nircord**®

® Regd. Trade Mark

**Nirlon Synthetic Fibres & Chemicals Ltd.**

Nirlon House, 254-B, Dr. Annie Besant Road, Bombay-400 025.

Interpub/NIR-C/48A/74

# சிரித்து வாழ வேண்டும்

எம்.ஜி.ஆர். படம் என்றால் அதில் இன்னின்ன அம்சங்கள் இருந்தாக வேண்டும் என்று ரசிகர்களுக்கு அத்துப்படி. அவற்றில்எதையும் குறைக்கவில்லை. சஞ்ஜீர் என்ற ஹிந்திப் படத்தின் வழிவந்த கதைதான் என்றாலும் ஒருசில மாற்றங்களையும் செய்யாமலில்லை.

இன்றைய சூடான செய்திகள் — கள்ளக் கடத்தல், போலி மருந்து ஆகியவைகளோடு எம். ஜி. ஆர். தம் கொள்கைப் பிரசாரத்தையும் ஆங்காங்கே தெளித்திருக்கிறார். ஒருமைப்பாட்டையும் கொஞ்சம் தொட்டுக் கொண்டிருக்கிறார். ஹிந்து ராமு, முஸ்லிம் அப்துல் ரஹ்மான், கிறிஸ்துவ டிசில்வா, வடநாட்டு லம்பாடிப் பாவை மாலா ஆகிய நான்கு பேரையும் ஒன்றுபடுத்தும் வகையில் அமைந்துள்ள கதை ஒருமைப்பாட்டுக்கு அடையாளமில்லையா?

பண வசூல் விஷயத்தில் படுத்துவிடாமலிருக்கப் படத்தில் என்னென்ன தேவையோ அவற்றை மறக்காமல் சேர்த்திருக்கிறார்கள். நெருக்கமான காதல்காட்சிகள், ஆடிப் பாடக் கைகொடுத்துதவும் கனவுக் காட்சிகள் எல்லாம் உண்டு. படத்தின் பெண் பாத்திரம் லதாதான். 'வெடுக்' பேச்சும் சிரிப்பும் ரம்யமாக இருக்கின்றன. கற்பழிக்கும் கட்டமான காட்சிக்கும் இடமளித்திருக்கிறார்கள். எம். ஜி. ஆர். இருக்கும்போது 'டிஷ்யூம், டிஷ்யூம்' இல்லாதிருக்குமா? நிறையவே இருக்கிறது. கதாநாயகன் போலீஸ் இன்ஸ்பெக்டராயிற்றே? இரட்டை வேடம் வேறு! இன்ஸ்பெக்டர் ராமு சின்ன வயதில் தம் பெற்றோரைக் கொன்றவனின் முகத்தைப் பார்க்கவில்லை. ஆனால் துப்பாக்கி ஏந்திய அந்தக் கையில் தொங்கும் ஒரு குதிரை டாலரை மட்டுமே பார்த்திருக்கிறான். வில்லனின் அட்டகாசம் முடிய அந்த டாலரை இடையிலே ஒருபோதும் காட்டாமல் கடைசியில் காட்டிக் கதையை முடித்திருக்கிறார்கள்.

பெண்களை அணைத்த நிலையிலேயே சதித் திட்டங்களை வகுக்கும் வில்லன் நம்பியாருக்குத் தன் திட்டங்கள் எல்லாம் ராமுவுக்கு எப்படியோ தெரிந்து விடுகின்றனவே என்று கொஞ்சம் கூடச் சந்தேகமே ஏற்படவில்லை. ஒற்றைக்கண் மனோகரும் கூட அதைப்பற்றி யோசிக்கவில்லை. வில்லன்களுக்குத் தெரியாதா இது 'உளவாளாக்க கட்டிக்'கான சினிமாக் கதை என்று!

கண்ணுக்குக் குளுமையான வண்ணப் படப் பிடிப்பும், காதுக்கு இனிமையான சில பாடல்களும் ரசிகர்களுக்கு விருந்தாக இருக்கின்றன.

சிரித்து வாழ வேண்டும் படத்தில் சிரிப்புக்கென்று தனியாக ஏதுமில்லை. உள்ளத்தைத் தொட்டு உணர்ச்சி வசப்பட வைக்கும் கட்டங்களில்லை. சிந்திக்க வேண்டிய சிரமத்தையும் ரசிகர்களுக்குத் தரவில்லை.

திரைக் கதை, டைரக்ஷன் ஆகிய பொறுப்புக்களை ஏற்றிருப்பவர் திரு எஸ். எஸ். பாலன். உதயம் புரொடக்ஷன்ஸாரின் 'சிரித்து வாழ வேண்டும்' பார்த்துப் பழகிய வழக்கமான சூரியோதயம்தான். ஆனால் சூரியோதயத்தை எத்தனை தரம் பார்த்தாலும் அலுக்காதே பலருக்கு! —கௌசிகன்



# பாக்கியசாலிகள்!

நண்பர் சோவுக்கும் எனக்கும் நன்கு அறிமுகமான அந்த நண்பர் ஒரு நாள் காரியாலயத்துக்கு என்னைக் காண வந்திருந்தார். பேச்சினிடையே அன்று சோவின் புது நாடகம் அரங்கேறுவதைக் குறிப்பிட்டார்.

'' நீங்கள் ஒத்திகை நடப்பதைப் பார்த்திருப்பீர்களே ? எப்படி இருக்கிறது?'' என்று கேட்டேன்.

''இந்த நாடகம் ரொம்ப வித்தியாசமாக அமைந்திருக்கிறது!'' என்றார்.

''அதாவது கதை அம்சத்துக்கு முக்கியத்துவம் தந்திருக்கிறார் என்கிறீர்களா?''

'' ஆமாம்; அந்தக் கதை ரொம்ப அழுத்தமான கதையாகவும் இருக்கிறது '' என்று சொல்லி இரண்டு மூன்று வாக்கியங்களில் கதைக் கருவைக் கூறினார் நண்பர்.

அதைக் கேட்ட உடனேயே, ''எனக்கு ஓர் உதவி செய்யுங்கள்; மாலை அவரைச் சந்திக்கும் போது கல்கியில் நாடகத்தைப் பிரசுரித்துக் கொள்ளலாமா என்று விசாரித்து ஃபோனில் தகவல் தெரிவியுங்கள்'' என்றேன்.

''ஆகட்டும்'' என்று கூறி எழுந்து போன நண்பர் மறு நாள் காலை ஃபோன் செய்தார்.

''காயா? பழமா ?'' என்றேன்.

''பழம்தான் ஸார்! மரத்திலேயே முற்றிப் பழுத்த பழம் !''

''அப்படியென்றால் ?''

'' உங்கள் கோரிக்கையை நான் வெளியிட்டதும் சோ ரொம்ப சந்தோஷப்பட்டார். அதோடு நில்லாது, 'நான் பத்திரிகைத் துறையிலோ திரைப்படத் துறையிலோ நாடகத் துறையிலோ அதிகமாகப் பிரபலமடையாத நாட்களில் என்னை எழுதச் சொல்லி ஊக்குவித்தது கல்கிதான். எனவே நான் ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறேன். மகிழ்ச்சியோடு சம்மதம் அளிக்கிறேன்' என்றார்.''



இதைக் கேட்டதும் என் உள்ளம் நெகிழ்ந்தது. அடுத்தாற்போல் நாடகப் பிரதியைக் கேட்டு வாங்கவும் புகைப்படம் எடுப்பது போன்ற விஷயங்களைப் பற்றி ஆலோசிக்கவும் சன்மான விஷயமாகப் பேசவும் கல்கி உதவி ஆசிரியர்கள் சோவைச் சந்தித்தனர்.

அவர்களுக்கு முழு ஒத்துழைப்பை அளித்த சோ, ''சன்மான விஷயமாக மட்டும் என்னிடம் எதுவும் பேசாதீர்கள். கல்கிக்கு இது என் அன்புக் காணிக்கை'' என்று கூறிவிட்டார். உதவி ஆசிரியர்களுக்கு வியப்பு கலந்த அதிர்ச்சி ! ''உங்களுக்குப் பிடித்தமான ஒரு நற்பணிக்குச் சன்மானத்தை நன்கொடையாக வழங்கிவிடுங்களேன்'' என்றார்கள்.

''அதை நீங்களே செய்து விடுங்கள் !'' என்றார் சோ ! ''அந்த நற்பணி என்ன என்பதை என்னிடம் சொல்லக்கூட வேண்டாம். சொன்னால் அதில் நான் சம்பந்தப்பட்டவனாகி விடுவேன் !''

சோ என்ற அந்த ஓரெழுத்து மனிதருக்குள் இத்தனை பெரிய மனமா என்று பின்னால் விஷயம் அறிந்த நானும் ஆச்சரியப்பட்டேன்.

இவ்வளவுக்குப் பிறகும் எனக்கு மனத்துக்குள் ஒரு கலக்கம். 'என்னடா, நாடகத்தைப் பார்க்காமலேயே அதைப் பிரசுரிக்க அனுமதி கோரிப் பெற்று விட்டோமே? கதைக் கருவை மட்டும்தானே கேட்டறிந்தோம். இது கல்கி நேயர்களுக்கு நம் கடமையைச் சரிவரச் செய்ததாகுமா ?' என்று ஒரு தவிப்பு.

எனவே நுங்கம்பாக்கம் கல்சரல் அகாடமி சார்பில் நாடகம் நடந்த போது திரை தூக்கக் காத்திருக்கையில், என் உள்ளம் 'முருகா, முருகா' என்று ஜபித்துக் கொண்டிருந்ததில் வியப்பில்லை. முருகன் என்னைக் கைவிடவும் இல்லை.

நாடகம் அற்புதமாய் அமைந்திருந்தது. சோவின் வழக்கமான நகைச்சுவை அம்சங்களுக்குக் குறைவேயில்லை. அரசியல் ரீதியான விண்டலும் அமர்க்களப்பட்டது. நடிப்பு, டைரக்ஷன் எல்லாம் அபாரம். ஆனால் இவ்வளவையும் பின்னணிக்குத் தள்ளிக்கொண்டு முன்னின்றது அற்புதமான ஒரு கதை. அந்தக் கதை, அதை வளர்த்துச் சென்றுள்ள பாணி, அது இலை மறை காயாக உணர்த்துகின்ற உன்னதக் கருத்துக்கள் எல்லாம் நாடகத்தின் தரத்தை மிக மிக உயர்த்தி விட்டன. சமீப காலத்திய தமிழ் இலக்கியப் படைப்புக்களில் போற்றத்தக்கன வரிசையிலே **உண்மையே, உன் விலை என்ன ?** இடம் பெறுகிறது.

கல்கி நேயர்கள் பாக்கியசாலிகள் !

—ஆசிரியர்

# சோ

எழுதும் நாடகம்

# உண்மையே, உன் விலை என்ன?



கல்கி 12.1.75

பொங்கல் சிறப்பிதழில்
ஆரம்பமாகிறது

# பிரச்னைகள் தீர பிரமாதவழி!

—திரஜா—

'துக்ளக் நாட்டுச் சரித்திரம்' என்ற பெயரில் மூர்மார்க்கெட் பழைய புத்தகக் கடை ஒன்றிலிருந்து ஒரு புத்தகம் வாங்கி வந்தேன். அதில் நான் படித்த சில பகுதிகள்!

திடுமென்று ஒருநாள் துக்ளக் நாட்டு மந்திரி சபையில் ஒரு பிரச்னை முளைத்துவிட்டது. நிதி மந்திரியும், சிவில் சப்ளைஸ் மந்திரியும் கன்னத்தில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்தார்கள். வேறென்ன, மக்களைப் பற்றிய கவலைதான்.

கட்டடங்கள் கட்டுவதற்கான செங்கற்கள் சரிவரக் கிடைப்பதில்லை என்று பொதுமக்களிடமிருந்து வந்திருக்க சில கடிதங்களை அந் நாட்டுப் பத்திரிகைகள் பிரசுரித்திருந்தன. அவற்றை இந்த இரண்டு அமைச்சர்களும் பார்த்தார்கள். 'அடடா! மக்களுக்கு இப்படியொரு பிரச்னை இருக்கிறதே! இதைத் தீர்த்து வைக்காவிட்டால் அப்புறம் க்ஷேம நல அரசு என்று நாம் எதற்காகப் பெயர் வைத்துக் கொண்டிருப்பது!' என்று தோன்றியது.

பிரதம மந்திரியுடன் கலந்தாலோசித்தார்கள். அதன் முடிவில், செங்கல் விநியோகத்தை அரசே மேற்கொள்வது என்று தீர்மானமாயிற்று. உடனடியாக 'செங்கல் (தயாரிப்பு மற்றும் விநியோகம்) அவசரச் சட்டம்' என்ற ஒன்று தயாரிக்கப்பட்டு, கையிலே பேனாவைத் தயாராகத் திறந்து வைத்துக் கொண்டிருந்த அந்நாட்டு ஜனாதிபதியிடம் கையெழுத்துக்காக அனுப்பப்பட்டது. ஜனாதிபதியும் சந்தோஷத்துடன் கையெழுத்துப் போட்டார்.

உடனே செங்கல் கார்ப்பொரேஷன் ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டது. ஏகத் தடபுடலுடன். அந்தக் கார்ப்பரேஷனின் உயர் அதிகாரிகள் பதினெட்டுப் பேர் கொண்ட ஒரு குழு, மற்ற நாடுகளில் செங்கல் தயாரிப்பு, விநியோகம் இவை எப்படி நடைபெறுகின்றன என்று பார்க்கச் சுற்றுப் பயணம் போய் வந்தது. தனியார் செங்கல் சூளைகளெல்லாம் அரசு உடைமையாக்கப்பட்டன. அது தவிர பொதுத்துறையில் மேலும் மாநிலத்துக்கு ஒன்று என்ற கணக்கில் செங்கல் தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டன.

செங்கல் தயாரிப்பிலும், விநியோகத்திலும் அரசு இறங்கினால் செங்கலின் விலை ஏறக் கேட்பானேன்?... மளமளவென்று ஏறி உச்சாணிக் கொம்பில் நின்றது. அதைத் தொடர்ந்து கள்ள மார்க்கெட், பதுக்கல், கள்ளக் கடத்தல் ஆகியவையும் வந்தன. துக்ளக் நாட்டின் சோஷலிஸ சமுதாயத்தில் பெருஞ் செல்வந்தர்களுக்கு மட்டுமே செங்கல் கிடைத்தது. ஆட்சி பீடத்துக்குப் பரம திருப்தி! சாமானியருக்கு இனி செங்கல் பற்றிய கவலையே இராதல்லவா?

இப்படியாக, சாமானியரின் பிரச்னையை சமாளித்து விட்டோம் என்று மந்திரிகள் மகிழ்ந்து கொண்டிருக்கையில் இன்னொரு தலைவலி கிளம்பியது. 'மணல் சரியாகக் கிடைப்பதில்லை!' என்ற கூக்குரல்தான்!

அரசாங்கம்தான் எப்போது பொதுமக்கள் இம்மாதிரி குறைகளை வாய்விட்டுச் சொல்லப் போகிறார்கள் என்று காத்திருக்கிறதே!... செங்கல் கார்ப்பரேஷனைப் போலவே 'மணல் கார்ப்பரேஷன்' என்ற ஒன்றையும் நிறுவினார்கள். 'மணலைக் கயிறாகத் திரிப்பதில் மன்னன்' என்று புகழ்பெற்ற ஓர் அமைச்சரின் மாப்பிள்ளை இந்தக் கார்ப்பரேஷனின் மானேஜிங் டைரக்டர் ஆனார். அவரும் வெளிநாடுகளுக்கெல்லாம் போய்விட்டு வந்து, "மணல் உற்பத்திக்கு நாடெங்கிலும் பல தொழிற்சாலைகளை நிறுவ வேண்டும்!" என்று அறிக்கை கொடுத்தார். "பேஷாகச் செய்யுங்கள்!" என்று பச்சைக் கொடி காட்டியது அரசாங்கம். அமைச்சரின் மாப்பிள்ளை பணம் பண்ணினார். மணல் கேட்ட மக்கள் தலையில் மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டார்கள். இவ்விதமாய் மணல் பிரச்னையும் வெற்றிகரமாகத் தீர்ந்த சமயத்தில் மக்களிடமிருந்து இன்னொருவிதமான கோஷம் எழுந்தது: "சுண்ணாம்பு கிடைக்கவில்லை!"

"எப்படிக் கிடைக்கும்?.... சுண்ணாம்பு வியாபாரிகள் மொத்தப் பேரும் சுரண்டல் பேர்வழிகள். முதலாளித்துவ மாதிரிகள். கள்ளப் பணக்காரர்கள். அவர்களுக்குச் சரியான பாடம் கற்பித்தாலொழிய, சுண்ணாம்புப் பிரச்னை சுலபத்தில் தீரப் போவதில்லை!" என்று மந்திரி சபைக் கூட்டத்தில் அடித்துப் பேசினார் வர்த்தக அமைச்சர்.

[illegible]

"ஒப்புக் கொள்கிறேன்.... இதற்கு என்ன செய்யலாம் என்கிறீர்கள்?" என்று கேட்டார் பிரதமர்.

"சுண்ணாம்பு வியாபாரத்தைத் தேசிய மயமாக்குவோம்.... காரணமின்றிச் சுண்ணாம்பை விரயம் செய்பவர்களைத் தண்டிக்கச் சட்டம் போடுவோம்!"

"தேசிய மயமாக்குவதா? நஷ்டஈடு கொடுக்கவேண்டியிருக்குமே!"

"'நஷ்டஈடு எதுவும் கொடுக்கப்படமாட்டாது' என்று அதற்கு முன்பாக ஓர் அவசரச் சட்டம் போட்டால் பிரச்னை தீர்ந்தது.... ஜனாதிபதியும் கையெழுத்துப் போட்டு, ஒரு மாத காலமாகிறது.... அவருக்கும் இது ஒரு சந்தர்ப்பம்......."

அப்படியே அவசரச் சட்டம் போட்டார்கள். சுண்ணாம்பு சில்லறை மற்றும் மொத்த வியாபாரத்தை அரசாங்கமே மேற்கொண்டது. வெற்றிலைபாக்குக் கடைகளில் சுண்ணாம்பு என்ன விலைக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்றும் ஒரு துணைச் சட்டம் போட்டார்கள். சுண்ணாம்பு விற்க எல்லாக் கடைகளும் லைசென்ஸ் பெற வேண்டும் என்று விதித்தார்கள். இந்த வகையில் அரசாங்கத்துக்கு நிறையப் பணம் கிடைத்தது.

அதையும் வெளிநாட்டுக் கடனுதவியையும் வைத்துக்கொண்டு, பொதுத்துறையில் பத்து சுண்ணாம்புக் காளவாய்களைத் திறந்தார்கள்.

சுண்ணாம்புத் தொழில் தேசியமயமாக்கப்பட்டதும் வெற்றிலை போடுவது, வீட்டுக்குச் சுண்ணாம்பு அடிப்பது போன்ற பல காரியங்களும் ஏராளமான கறுப்புப் பணம் வைத்திருக்கும் ஆசாமிகளுக்குத்தான் சாத்தியம் என்ற நிலை ஏற்பட்டு விட்டது. சாமானிய மக்கள் சுண்ணாம்பை உபயோகிப்பதையே விட்டுவிட்டார்கள். சுண்ணாம்பு என்ற ஒரு வஸ்து இருப்பதையே மறந்து விடும் நிலைக்கு வந்துவிட்டார்கள்! பிரச்னையை இப்படி வெகு எளிதாகச் சமாளித்துவிட்ட திருப்தியில் அரசு அமைந்து கொண்டிருக்கும் போது இன்னொரு பிரச்னை தலை தூக்கியது. 'சுண்ணாம்பு அடிக்கப் பயன்படுத்தப்படும் குச்சி மட்டைகள் சரிவரக் கிடைப்பதில்லை' என்று மக்கள் குறைப்பட்டுக் கொண்டார்கள்.

"குச்சி மட்டை கார்ப்பரேஷன் ஒன்றை உடனடியாக ஆரம்பிக்க ஏற்பாடு செய்யுங்கள்!" என்றார் பிரதமர்.

"உள்நாட்டில் இதற்கு வேண்டிய தொழில் நுட்பம் கிடைக்குமா என்பது சந்தேகமாக இருக்கிறது....."

"ஜப்பான் இந்தத் தொழிலில் வெகுவாக முன்னேறியிருக்கிறது.... அவர்களுடன் தொழில் கூட்டுறவு ஒப்பந்தம் செய்து கொள்ள முடியுமா என்று பாருங்கள்!"

பிரதமர் சொல்லிவிட்டால் அப்புறம் அப்பீல் ஏது? ஜப்பான் நாட்டுடன் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அதன்படி, தரமான குச்சி மட்டை செய்வது எப்படி என்று கற்றுக் கொடுப்பதற்காக அந்நாட்டிலிருந்து கைகு ஒரே குமிமாடா என்ற பெயர்கொண்ட நிபுணர் ஒருவரும் வந்து சேர்ந்தார். நிபுணரின் பெயர்ப் பொருத்தம் பற்றியே மக்கள் எல்லோரும் வியந்து கொண்டிருந்தார்கள்! இவ்வாறாகத் துக்ளக் நாட்டின் சோஷலிஸ ஆட்சி செங்கல் —, மணல், சுண்ணாம்பு, குச்சி மட்டை எல்லாவற்றின் விலை உயர்வுக்கும் பதுக்கலுக்கும் கள்ள மார்க்கெட்டுக்கும் வழி வகுத்து, சாமானியருக்குப் பேருதவி புரிந்து பெரும் புகழ் ஈட்டி வருகையில் மற்றொரு கொந்தளிப்பு ஏற்பட்டது. மக்கள் ஆங்காங்கு நேரடிப் போராட்டத்தில் ஈடுபட்டார்கள். அரசாங்க உடைமைகளை நாசமாக்கவும்கூட அவர்கள் தயங்கவில்லை...

முடிவுரை: அந்தச் சரித்திரப் புத்தகத்தை நான் முழுதும் படிப்பதற்குள் 'திரைப்பட விநியோகத்தை மேற்கொள்ளலாமா என்று நமது மத்திய அரசு யோசித்து வருகிறது' என்ற செய்தி பத்திரிகையில் வந்திருப்பதாக மாலை நாளிதழைப் படித்துக் கொண்டிருந்த என் சகதர்மிணி சொன்னாள். அதன் பிறகு என் கையிலிருந்த புத்தகத்தைத் தொடர்ந்து படிக்க எனக்குப் பயமாயிருந்தது. மூடி வைத்து விட்டேன்!



வாழ்க்கையில் சுயமாக வளம் பெறும் ஆடவர் ஒருவர்...

...அதற்குத் துணை செய்ய அழகான ஆடைகளையும் அணிகிறார்!



நிச்சயமாக, மஃபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான் !

AIYARS-M.461 TM



இம்மாதம் 6, 7, 8 தேதிகளில் மதுரையில் தி. மு. க. வின் செயற்குழுவும், பொதுக்குழுவும் கூடிப் பல தீர்மானங்கள் நிறைவேற்றியுள்ளன. பொதுக்குழுக் கூட்டத்துக்கு ஏராளமான அங்கத்தினர்களும் விசேஷ அழைப்பைப் பெற்றவர்களும் வந்திருந்தனர். முதல்வர் கருணாநிதி பொதுக் கூட்டத்தில் பேசுவதைப் பார்க்கலாம்.



பேராசிரியர் எஸ். இராமநாதனின் 'சிலப்பதிகாரத்தில் இசை' என்ற ஆராய்ச்சிக் கட்டுரையை அங்கீகரித்து அமெரிக்காவிலுள்ள வெஸ்லேயன் பல்கலைக் கழகம் அவருக்கு டாக்டர் பட்டம் வழங்கியுள்ளது. அதைப் பாராட்டித் திருச்சியில் உள்ள ஸத்குரு சமாஜம் மற்ற சங்கீத சபையினருடன் சேர்ந்து ஒரு விழா நடத்தியது.



ஸ்ரீமதி எம். எல். வி. அவர்களுக்கு ஏற்கெனவே உள்ள பட்டங்களுடன் சங்கீத கலாசாகரம் என்ற பட்டமும் தற்போது சேர்ந்து கொண்டிருக்கிறது. இப்பட்டத்தைத் தனது வருடாந்தர இசை விழாவின் போது எம். எல். வி.க்கு அளித்துக் கௌரவித்தது விசாகப்பட்டினத்தில் நடந்து வரும் விசாக இசைச் சங்கம்.

அமெரிக்காவில் பதின்மூன்று வயதான இந்தப் பெண் இருட்டில் எழுத வசதியாகக் கோடு போட்ட தாளைத் தயாரித்திருக்கிறாள். இருட்டில் ஒளிரும் மசியினால் கோடுகள் இந்தத் தாளில் அச்சாகியுள்ளன. எனவே சிரமமின்றி எழுதலாம்.



இன்றைய வைத்தியத் தொழில் இயந்திர மயமாகி விட்டது. பலவித பரிசோதனைகளுக்கு யந்திரங்கள் தேவைப்படுகின்றன.

சேஷசாயி பிரதர்ஸார், பாரதம் முழுவதிலும் கிழக்கு ஜெர்மனியில் தயாரிக்கப்படும் வைத்திய இயந்திரங்களை விற்கும் உரிமையைப் பெற்றிருக்கிறார்கள். இருபது வகை நுட்பக் கருவிகளை விற்கத் தயாராய் இருக்கிறார்கள்.

இவை தவிர சேஷசாயி பிரதர்ஸ் 'சுமார் ஆறு கருவிகளைத் தாங்களே தயாரிக்கவும் திட்டமிட்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய முன்னேற்றம்.



(ஸ்தாபிதம் : 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்கராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

தந்தி : 'EVERMANS', போன் : 85834 • தபால்பெட்டி : 414

### நீண்டகாலச் சீட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகிய காலச் சீட்டுகள்

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குருப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள் : புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா - கோயம்புத்தூர்




எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

## ஒற்றர் ஜாக்கிரதை — சென்ற இதழ் தொடர்ச்சி

சில நாட்களுக்குப் பின் நட்ஸ்னரின் தாய் ஒரு பார்ட்டியில் ரிப்பன்ட்ராப்பைச் சந்தித்த போது...

என் மகளுக்குச் சிபாரிசு செய்து பெரிய பதவி அளித்தீர்கள்! ரொம்ப நன்றி.

என்னாலானதைச் செய்தேன்!















# ஒற்றர் ஜாக்கிரதை 5

தொகுப்பு: நாடோடி  சித்திரம்: ராஜு

கிரேக்கப் பத்திரிகை ஒன்றின் பாரிஸ் நிருபர் கான்ஸ்டன்டைன். அவனது மற்றொரு தொழில் ஒற்றாடல்! ஜெர்மானிய ஒற்றனாகப் பணியாற்றிய அவனுக்குப் பிரெஞ்சுக் காதலி ரெஜினா. ஒரு நாள்....









ஸாக்ஸை நீரில் நனைத்துப் பிழிந்ததால் கான்ஸ்டன்டைனுக்கு ரகசிய ரசாயனத் திரவம் கிடைத்ததை உணர்ந்தாள் ரெஜினா.




அவள் பிரெஞ்சு அதிகாரிகளைச் சந்தித்துக் கான்ஸ்டன்டைன் பற்றிக் கூறிய போது....




கிரீஸ் அப்போது ஜெர்மானியர் வசம் இருந்ததால் கிரேக்கப் பத்திரிகைத் தலைமையகத்திலிருந்து கான்ஸ்டன்டைனுக்குத் தகவல் அனுப்புவது ஜெர்மானிய அதிகாரிகளுக்குச் சாத்தியமாயிற்று.




.... பிரெஞ்சு கலாசாரம் பற்றிக்கட்டுரை வேண்டுமாம்! பேஷ்! மார்ஜினில் இருக்கும், ஜெர்மானிய ராணுவ மந்திராலயத்தின் செய்தி!


ரசாயன திரவத்தைத் தடவி அனலில் சூடேற்றினால் மறைந்திருக்கும் எழுத்து புலனாகும்!


காதலிகள் ஜாக்கிரதை? ஒரு வேளை ரெஜினை பற்றி ஜெர்மானிய அதிகாரிகளுக்குத் தெரிந்து விட்டதோ? அவள் பிரெஞ்சு வேவுகாரியோ? என்னைக் காதலிப்பதாய் நடிக்கிறாளோ?


சில நாட்கள் கழித்து வந்த வேறொரு கடிதத்தில் மறைந்திருந்த எழுத்து வெளிப்பட்ட போது....


ஜெர்மானிய ஒற்றர் தலைவி தான் லேடி டாக்டர் என்ற புனை பெயருடன் வருவாள். காதலி ஜாக்கிரதை என்ற அவர்கள் அறிவுரையை நான் அலட்சியம் செய்திருப்பது அவளுக்குத் தெரியக் கூடாது.


தான் ரீம்ஸ் நகர் போவதாகக் கூறி ரெஜினை அவள் தாய் வீட்டுக்கு அனுப்பினான் கான்ஸ்டன்டைன்.
அவள் உடைமைகளை யெல்லாம் இந்தப் பெட்டியில் திணித்து நண்பன் வீட்டில் வைத்து விடுகிறேன்.

தொடரும்

# நடுத்தெரு நாடகம்

ஸோமாஸ்

உஷா ஆபீசுக்குப் போகும்போது மணி ஒன்பது என்று யாரும் கடிகாரத்தைப் பார்க்காமலே தீர்மானித்துச் சொல்லலாம்.

உஷாவின் தோற்றத்தில் எந்தவிதமான ஆடம்பரமும் இடையாது. ஆனால் தனிப்பட்டதொரு கவர்ச்சி அவளிடம் இருந்தது. அளவான உயரம், உயரத்துக்கேற்ற பருமன், கரிய பெரிய விழிகள், தந்தத்தில் கடைசல் பிடித்த மாதிரி அவள் மேனி முழுவதும் ஒரு நேர்த்தி — எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்த மாதிரி அடர்த்தியும், நீளமும் உள்ள கருமையான கூந்தல். அவளது அழகிய மேனியைச் சுற்றிக் கொண்டு, அழகுக்கு அழகளிக்கும் 'நைலான் ஸாரி' அந்தப் பாக்கியத்தைப் பெற என்ன மாதவம் செய்ததோ !

அன்ன நடைக்கு இலக்கணம் வகுத்துக் கொண்டு அவள் ஆபீசுக்குப் போகும்போது ஒரு குறிப்பிட்ட தெருவைக் கடந்துதான் போக வேண்டும். தினம் அந்தத் தெருவில் உஷா நுழைந்த சிறிது நேரத்துக்கெல்லாம் அவளுக்காகவே காத்திருந்த மாதிரி அந்தப் பெரிய வீட்டிலிருந்து தெருவுக்கு வந்து உஷாவைப் பின்பற்றிச் சுமார் நாலடி தூரத்தில் மெதுவாக நடந்து செல்லுவான் ஒரு வாலிபன். அந்தத் தெருக் கோடி வரையில் அவன் அவளுக்குப் பின்னாலேயே சென்றுவிட்டு அப்படியே மெயின் ரோட்டில் இருந்த ஹோட்டலுக்குள் நுழைந்துவிடுவான். அவளைப் பார்த்த கையோடு ஒரு ஸ்வீட் சாப்பிடுவான். இந்த நாடகம் தொடர்ந்து மாதக் கணக்கில் நடந்து வந்தது. 'அடாது மழை பெய்யினும் விடாது நாடகம் நடக்கும்' என்று பழைய காலத்து நாடக விளம்பரங்களில் போடுவார்களே அந்த மாதிரி.

இத்தனைக்கும் உஷா அந்த வாலிபனைத் திரும்பிக்கூடப் பார்த்ததில்லை. ஆனால், வாலிபனோ, தேவியின் கடைக்கண் அவன் மீது ஒரு நாள் இல்லாவிட்டால் இன்னொரு நாள் விழுந்தே தீரும் என்ற நம்பிக்கையில் உறுதியாயிருந்தான். தினத்துக்கொரு கவர்ச்சியான உடையோடு வாலிபன் தன் தவத்தைத் தொடர்ந்து கொண்டிருந்தான்.

ஒரு வாலிபன் தினசரி தவறாமல் தன்னைத் தொடர்ந்து வருகிறான் என்ற எண்ணமே உஷாவின் முகத்தைச் சிவக்க வைத்தது. ஒரு நாள் அவள் திடீரென்று நின்று அவனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தாள். ஒரே ஒரு விநாடிதான். அப்பப்பா ! அந்தப் பார்வைக்குத்தான் எத்தனை சக்தி ! வாலிபன் மீது விழுந்த அந்தப் பாவையின் கடைக்கண் பார்வை 'ஏர்கண்டிஷண்டு' அறைக்குள் திடீரென்று புகுந்துவிட்டது போன்ற உணர்வை அவனுக்கு ஏற்படுத்தியது.





பம்பாய், அந்தேரியில் உள்ள ஸ்ரீராம் சேவாநல சங்க உயர்நிலைப் பள்ளி (S. R. W. Society's High School)யில் மேற்கொண்டு இட வசதி ஏற்படுத்த வேண்டி விரும்புவதால் ஒரு மாடிக் கட்டடம் கட்ட முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இந்தக் கட்டடத்தின் உத்தேச மதிப்பு சுமார் இரண்டு லட்சம் ரூபாய். இதற்காகக் குமாரி சித்ரா சுந்தரத்தின் பரதநாட்டிய நிகழ்ச்சி பம்பாய் சண்முகானந்த சபா அரங்கில் 22-12-74 அன்று ஏற்பாடாகியிருக்கிறது.



1971ம் ஆண்டு பம்பாய் அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட குமாரி சித்ரா சுந்தரம் பரதக் கலையில் நல்ல தேர்ச்சி பெற்றவர். நல்ல நடனத்தைக் காணவும் கல்விக்கு உதவவும் பம்பாய் பொது மக்களுக்கு அரிய வாய்ப்பு. விலாசம்: S. R. W. Society's High School, Sreeram Nagar, S. V. Road, Andheri (West), Bombay - 400058.

---

ஒரு வாலிபன் தன்னையே விறைக்க விறைக்கப் பார்ப்பதைக் கண்டு உஷாவும் தடுமாறித்தான் போனாள். இது அவளுக்கு மிகவும் நூதனமான அனுபவம். ஒரு கணம் அயர்ந்து போய் நின்றாள்.

''தேவி, மூன்று மாத காலமாக உன்னைத் தொடர்ந்து வரும் உன் பரம பக்தனிடம் இன்றைக்குத்தான் கருணை பிறந்ததா?''

ஒரு வேளை, அவன் பைத்தியமோ என்று உஷா பயந்தாள். ஆனால் வாய் திறக்கவில்லை.

''என்ன பைத்தியமா இவனுக்கு என்று யோசிக்கிறாயா? ஆம், பைத்தியந்தான். உன் அழகுதான் என்னைப் பைத்தியமாக்கி விட்டது. பயப்படாதே. உன்னை நான் ஒன்றும் செய்துவிடமாட்டேன். நான் பெரிய பணக்காரன். பங்களா, கார், வேலையாட்கள் எல்லாம் இருந்தும் உன்னிடம் கையேந்தி நிற்கிறேன்......''

தன்னை மறந்து நின்ற உஷா திடீரென்று தன் உணர்வை அடைந்தாள். அவளையும் மீறிக் 'களுக்'கென்று சிரித்துவிட்டாள். அந்தச் சிரிப்பின் இன்னிசையில் வாலிபன் துவண்டு போய்விட்டான். ''ஏன் சிரிக்கிறாய்? உனக்குப் பரிகாசமாய்த்தான் இருக்கும். என் இதயத்தைப் பிளந்து காட்ட முடியுமானால், அதில் நீ கொலுவிருப்பதைக் காட்டுவேன்..... இருந்தாலும் நீ சிரித்ததற்குக் காரணம் என்ன? பரிகாசமா, சொல்!'' என்றான்.

கண நேரச் சிந்தனையில் தெம்பு பெற்றுவிட்ட உஷா, ''...பரிகாசம் இல்லை. என்னுடைய சாதாரணத் தோற்றத்தைப்பார்த்துவிட்டு இப்படி மெய்ம்மறந்து போகிறீர்களே! அவளைப் பார்த்துவிட்டால் உங்கள் கதி என்னவாகுமோ என்று நினைத்தேன். என்னையும் மீறிச் சிரிப்பு வந்துவிட்டது'' என்றாள்.

வாலிபன் திடுக்கிட்டு, ''....என்ன? அவளா? அவள் யார்?'' என்று கேட்டான்.

''உங்களுக்கு எப்படி அவளைத் தெரியும்? நீங்கள்தான் இந்தப் பக்கம் அந்தப் பக்கம் திரும்பாமல் தினம் என்னைத் தொடர்கிறீர்களே! அப்படியே ஹோட்டலுக்குள் நுழைந்து விடுகிறீர்கள். அவளை எப்படிப் பார்த்திருக்க முடியும்? அவள் பேரழகி. அவளும் நான் வேலை பார்க்கும் கம்பெனியில் தான் வேலை பார்க்கிறாள். அவளை மட்டும் நீங்கள் பார்த்துவிட்டால் அயர்ந்து போய்விடுவீர்கள்! நான் உங்கள் தெருவைக் கடந்து சென்ற சற்று நேரத்துக்கெல்லாம் அவள் ரொம்ப ஒய்யாரமாக நடந்து வருவாள்...'' இப்படிக் கூறிவிட்டு நகர்ந்தாள் உஷா.

வாலிபனின் பிரமை நீங்கச் சிறிது நேரம் ஆயிற்று. அவனும் ஆழ்ந்த சிந்தனையோடு திரும்பிச் சென்றான்.

உஷா அன்று மிகவும் உற்சாகமாயிருந்தாள். நடையில் தளர்வும், பார்வையில் மருட்சியும் இல்லை. அந்தத் தெருவுக்கு வந்ததும் வழக்கத்துக்கு விரோதமாக யாரையோ தேடிக் கொண்டே வந்தாள். அந்தப் பங்களாவை நெருங்கியதும் அந்த வாலிபன் ஏக்கம் கலந்த பார்வையோடு அவளை வரவேற்றான். ''...ஐந்து நிமிஷம் உள்ளே வந்து பேசிவிட்டுப் போவதில் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது...'' என்று கூறி உஷாவைத் தன் அறைக்கு அழைத்துப் போனான். அந்தப் பெரிய பங்களாவின் வாசற்புறத்திலேயே அவன் அறை இருந்தது. மிகவும் நவீன மோஸ்தரில் மேஜை, நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அவன் அவளை உட்காரச் சொன்னான். ஆனால் அவள் உட்காரவில்லை. அறை முழுவதும் நோட்டம் விட்டாள். அறையை அலங்கரித்த காலண்டர் படங்களே அவன் எப்படிப்பட்டவன் என்பதை உணர்த்தின. அறையில் நிலவிய மௌனத்தைக் கலைத்து வாலிபனே பேச ஆரம்பித்தான்:

'' என்னை ஏமாற்றிவிட்டாயே, இது நியாயமா...?''

''ஏன், என்ன நடந்தது?''

''.....என்ன நடந்ததா? நீ யார் என்று எனக்குத் தெரியும். உன்னுடைய அநாதரவான நிலையும் எனக்குத் தெரியும். நான் ஒரு பிரபு. அப்படிப்பட்டவன், வெட்கத்தை விட்டு உன்னைக் காதலித்துப் பின்தொடர்ந்தேன். நீ என்னை நிராகரித்திருந்தால்கூடப் பொறுத்திருப்பேன். நீ அந்தக் குரூபியான பெண்ணை, உன்னைவிட அழகியென்று கூறி என்னை அவள் பின்னால் போகச் செய்து அவமானப்படுத்தி விட்டாய்...!'' வாலிபனின் உதடுகள் துடித்தன. கண்களில் கோப வெறி.

உஷா கலகலவென்று சிரித்தாள்.

''ஆகா! உம்முடைய காதலை என்னவென்பது! நீர் உண்மையாகவே என்னைக் காதலித்திருந்தால், என்னைவிட அழகானவள் என்று ஒரு பெண்ணைப் பற்றிக் கூறியதும் அவளைப் பின்தொடர்ந்திருப்பீரா? நீர் பெண் பித்துப் பிடித்தவர். முதன் முதலில் என் உள்ளமும் உங்களைக் கொஞ்சம் நாட ஆரம்பித்தது. நல்ல வேளையாக என் புத்தி தடுமாறவில்லை. உமது காதலுக்கு ஒரு டெஸ்ட் வைக்கத் தீர்மானித்தேன். அதில் உமது யோக்யதை புரிந்துவிட்டது. நான் இனி மேல் இந்த வழியாக வரமாட்டேன். 'ரூட்'டை மாற்றிக் கொண்டுவிட்டேன். வருகிறேன்...'' என்று கூறிவிட்டு உஷா வாசலை நோக்கி நடந்தாள்.

வாலிபனுக்கு என்ன வந்தது! ஏன் நாற்காலியில் சாய்ந்துவிட்டான்?

# 'டெபிலைஸ்ட்'

## துணிகளுக்கு ஒரு மகத்தான பலனைச் சேர்க்கிறது— சுருக்கம் விழாமலிருக்கின்றன

சுத்தமான பருத்தி துணிகளுக்கும் அல்லது காட்டன் சிந்தடிக் கலந்த துணிகளுக்கும் ''டெபிலைஸ்ட்'' ஒரு மகத்தான பலனைச் சேர்க்கிறது. சுருக்கம் விழாத தன்மைக்கென சோதிக்கப்பட்டது உங்கள் துணிகளுக்கு மிகக் குறைவான இஸ்திரி செய்வதுடன் பார்ப்பதற்கும் மிக அழகாக உள்ளது.

''டெபிலைஸ்ட்'' எனும் வியாபாரச் சின்னம் உலகப் புகழ் பெறுவதுடன் இந்தியாவில் உள்ள முதன்மையான மில்களான அரவிந்த், பின்னி, டி ஸி எம், பாம்பே டையிங், ஸ்ரீ அம்பிகா தாகர்ஸே, மற்றும் டாட்டா, மபத்லால் தயாரிக்கும் தரமான துணிகளுடன் திகழ்கின்றது.

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு மீட்டர் துணியிலும் **TEBILIZED®** மார்க் இருக்கிறதா என்று பார்த்து வாங்கவும்.




**TEBILIZED®** சுருக்கம் விழாத தன்மைக்கென சோதிக்கப்பட்டது.

® ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்கின் உரிமையாளர்கள்
**மேட்டூர் பியர்ட்ஸெல் லிட்.,**
தபால் பெட்டி எண், 7, சென்னை-1.

SISTA'S-MBT-190-TAM-A





## போர்ஹென்ஸால் பல் துலக்கவும் அவளுக்குக் கற்பியுங்கள்.

### தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

ஈறுகளை உறுதியுடனும் ஆரோக்கியத்துடனும் வைத்திருக்க அவற்றைத் தினமும் தவறாமல் தேய்த்துக்கொடுப்பது சிறந்த வழி என்று பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள். அது போலவே, பற்சிதைவைத் தடுக்கும் சிறந்த வழி, இரவிலும் காலையிலும், ஒவ்வொரு முறை உணவருந்திய பின்னும், தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, பற்சிதைவைத் தோற்றுவிக்கும் உணவுத்துகள்களை அகற்றுவது.



உங்கள் குழந்தைக்கு போர்ஹென்ஸ் பழக்கத்தைக் கற்பியுங்கள். அதாவது, பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹென்ஸ் பற்பசை கொண்டு, போர்ஹென்ஸ் டபின்-ஆக்ஷன் ஜூனியர் டூத் பிரஷ்ஷால் தவறாமல் பல் துலக்கவும் ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்கவும் பழக்கப்படுத்துங்கள்.

### போர்ஹென்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது.

**போர்ஹென்ஸ்**

பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை

**இலவசம்!** "உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம். இப் புத்தகம்* பெற (தபால் செலவுக்காக) 25 பைசா தபால் தலையுடன் இக் கூப்பனை "மேனர்ஸ் டெண்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய்-1" என்னும் முகவரிக்கு அனுப்புக. K-6

பெயர் ______________ வயது ______

முகவரி ______________

*எந்த மொழியில் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, பஞ்சாபி, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

130F-182

# திருடர்கள்

ர.சு.நல்லபெருமாள்

## 24. காதல் விருந்து

ஞாயிற்றுக்கிழமை மாலை 6.30 மணி. சம்பத் தன்னுடைய அறையில் மிகுந்த பரபரப்புடன் இருந்தான். எல்லாம் சரியாக இருக்கிறதா என்று அடிக்கடி கவனித்துக்கொண்டான். நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. அடிக்கடி அறையை அடுத்திருந்த பால்கனிக்கு வந்து தெருவைப் பார்த்தான்.

சம்பத் தங்கியிருந்த மாடிப் பகுதியில் இரண்டு அறைகளும் ஒரு குளியலறையும் ஒரு வராந்தாவும் இருந்தன. அன்று வீட்டுக்காரர்கூட இல்லை. பக்கத்து ஊரில் ஏதோ ஒரு கல்யாணத்துக்காகக் குடும்பத்தோடு போயிருந்தார். ஆகவே வீட்டின் கீழ்ப் பகுதி பூட்டியிருந்தது. மனித நடமாட்டம் கிடையாது. அப்படி ஒரு சூழ்நிலை தானாக வந்து அமைந்ததை எண்ணி உற்சாகமடைந்திருந்தான் சம்பத். முன் ஜாக்கிரதையாக ஜன்னல்களின் திரைகளை இறக்கி விட்டிருந்தான்.

மாடியில் ஒரு படுக்கை அறை. அடுத்த அறையில் ஒரு மேஜையின் மீது விருந்துக்கான பதார்த்தங்கள் தயாராக இருந்தன. விருந்துக்காகக் கஸ்தூரி ஹோட்டலில் ஏற்பாடு செய்திருந்தான். ஹோட்டல் அதிபர் மூக்காண்டி ஐயர் மாலை ஆறு மணிக்கே பதார்த்தங்களை ஒரு வண்டியில் சம்பத்தின் அறைக்குக் கொண்டு வந்து விட்டார். பாதாம் அல்வா, வெஜிடபிள் பிரியாணி, வெஜிடபிள் குருமா, வெஜிடபிள் கட்லெட், சர்க்கரைப் பொங்கல், தயிர்ச் சாதம் — இவைதாம் விருந்துக்கான பதார்த்தங்கள். நான்கு பேருக்கான அளவு தயார் செய்யச் சொல்லியிருந்தான். மூக்காண்டி ஐயர் நான்கு பெரிய இலைகளையும்கொண்டு வந்திருந்தார். பதார்த்தங்களை அறையில் இறக்கி வைத்ததும் சம்பத் "என்ன ஆயிற்று?'' என்று கேட்டபடியே மேஜைக்குள்ளிருந்து பர்ஸை எடுத்தான்.

''இப்போது என்ன அவசரம்? விருந்து முடிந்து, பாத்திரங்களை எடுத்துப் போகும் போது வாங்கிக் கொள்கிறேன்'' என்றார் மூக்காண்டி ஐயர்.

''பாத்திரங்களைக் காலையில் எடுத்துக் கொள்ளுங்கள். நீங்கள் காத்திருக்க வேண்டாம்'' என்றான் சம்பத்.

மூக்காண்டி ஐயர் குழம்பினார். ''விருந்து பரிமாற வேண்டாமோ? நானே பரிமாறி விட்டுப் போகிறேன்'' என்றார்.

''வேண்டாம் ஐயர்வாள்! சிநேகிதர்கள் தானே. நாங்களே பரிமாறிக் கொள்வோம். இந்தாருங்கள். உங்களுக்கு எவ்வளவு தர வேண்டும் சொல்லுங்கள்'' என்றான் சம்பத்.

''இருபது'' என்றார் மூக்காண்டி ஐயர்.

சம்பத் இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்களை நீட்டினான். பணத்தை வாங்கியவாறே, ''பாத்திரங்களைக் காலையில் வந்து எடுத்துக் கொள்ளவா?'' என்று கேட்டார். சம்பத் தலையை ஆட்டினான்.

'பரிமாறக்கூடாது என்றால் அதற்கு என்ன அர்த்தம்? இது இரகசியமான ஒரு விருந்து. பிராந்தியோ விஸ்கியோ பரிமாறப் போகிறார்கள். நடக்கட்டும், நடக்கட்டும். ஜாலியாக இருக்கட்டும். சிறிசுகள்தானே'—மூக்காண்டி ஐயர் படி இறங்கிச் சென்றார்.

அறைக்குள் மேஜையைச் சாப்பாட்டுக்காகத் தயார் செய்தான் சம்பத். இரண்டு பேர் விருந்து சாப்பிட நான்கு பேருக்குத் தயாரித்திருப்பது வீண் என்று முனகிக்கொண்டான். நளினி சந்தேகப்படக் கூடாது என்பதற்காகத்தான் அந்த ஏற்பாடு. இருபது ரூபாய் செலவாகி விட்டது. இதுகூடச் செலவழிக்காமல் ஒரு பணக்காரியை வசப்படுத்துவதுதான் எப்படி?

ஏழு மணிக்கெல்லாம் நன்றாக இருட்டி விட்டது. சம்பத்தின் பரபரப்பு அதிகரித்துக்

கொண்டே யிருந்தது. வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. சம்பத் துள்ளி எழுந்தான். வராந்தாவுக்கு ஓடிப் போய்ப் பார்த்தான். கீழே காரிலிருந்து நளினி இறங்கிக் கொண்டிருந்தது தெரிந்தது. காரை அவள் தனியாகத்தான் ஓட்டி வந்திருக்கிறாள். டிரைவர், துணை யாருமில்லை என்பதைத் தெரிந்து கொண்டதும் உற்சாகமடைந்தான். விரைந்து மாடிப் படிகளில் இறங்கி ஓடினான். நளினியை வாசலிலேயே சந்தித்து விட்டான். அவளுடைய அலங்காரத்தைக் கண்டு மலைத்துப் போனான்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்றாள் நளினி. அவள் முகத்தில் நாணம் படர்ந்தது.

''...உன்னுடைய முகத்துக்கு இந்தக் கொண்டை எவ்வளவு எடுப்பாயிருக்கிறது! அலங்காரமே ஒரு தனிக் கலைதான். சிலருக்குத்தான் அதில் தேர்ச்சி உண்டு. நீ அதில் எக்ஸ்பர்ட் என்பதை நிரூபித்துவிட்டாய்... ஓ, வாசலிலேயே நிற்க வைத்துப் பேசுகிறேனே, வா, மாடிக்குப் போகலாம்'' என்றான் சம்பத், உற்சாகத்துடன். அவளைப் படியேறவிட்டுப் பின்தொடர்ந்தான்.

''நீங்கள் வைத்திருக்கும் விருந்துக்குத் தடபுடலாக வரவேண்டாமா, அதற்காகத்தான் இந்த அலங்காரம்'' என்றாள், நளினி திரும்பிப் பார்த்து. படியேறியபோது, அவளுடைய உடலின் அசைவுகளைக் கண்டு ரசித்தபடியே பின்தொடர்ந்த சம்பத், ''நோ நோ. இது தடபுடலான அலங்காரம் இல்லை. எளிமையான அலங்காரம்தான். அதில்தான் கவர்ச்சியும் அழகும் உண்டு. என்னுடைய விருந்தும் எளிமையாகத்தான் இருக்கும்'' என்றான்.

''எனக்கு எளிமையான விருந்துதான் பிடிக்கும்'' என்ற நளினி மாடியை அடைந்ததும்,

''என்ன, உங்கள் நண்பர்கள் யாரும் வரவில்லையா?'' என்று வியப்புடன் கேட்டாள்.

''இன்னும் இரண்டு பேரை அழைத்திருந்தேன். இப்போதுதான் அவர்களிடமிருந்து போன் வந்தது'' என்று ஏற்கனவே கற்பனை செய்திருந்த பொய்யைச் சொன்னான், சம்பத். ''ஒருவன் திடீரென்று டவுனுக்குப் போக வேண்டி வந்து விட்டதாம். திரும்பி வர மணி பத்தாகுமாம். இன்னொருவனுடைய அம்மாவுக்கு உடல் சரியில்லையாம். ஆஸ்பத்திரிக்கு அவசரமாகக் அழைத்துப் போக வேண்டியிருக்கிறதாம்.''

''ஐயோ.... அப்படியானால் சாப்பாடு வீணாகிப் போகுமே!''

''ஆமாம், நான்கு பேருக்குத் தயார் பண்ணச் சொல்லியிருந்தேன்'' என்றான் சம்பத், ஏமாற்றமடைந்தவன் போல் நடித்து. கூடவே ''அதனால் என்ன? இந்த விருந்தே உனக்காகத்தான். நீ வராமல் போயிருந்தால் தான் ஏமாற்றமடைந்திருப்பேன்'' என்றான்.

''இதோ உங்கள் பிறந்த நாள் பரிசு'' என்று கூறியபடியே கைப் பையைத் திறந்து ஒரு சிறு பொட்டலத்தை எடுத்துக் கொடுத்தாள் நளினி.

''இதெல்லாம் எதற்கு?'' என்றுக் கேட்டான் சம்பத், குழைவாக.

''பிறந்த நாளுக்குச் சும்மா போகக் கூடாது'' என்றாள் நளினி. அவளிடமிருந்து பொட்டலத்தை வாங்கி மேஜையின் மீது வைத்த சம்பத், ''நீ இங்கு வந்ததேஎனக்குப் பரிசு கிடைத்த மாதிரிதான்'' என்றான்.

''பிரித்துப் பாருங்களேன்'' என்றாள் நளினி. சம்பத் ஆவலோடு பிரித்தான். உள்ளே அழகான ஒரு கைக்கடிகாரம் இருந்தது. அதைக் கண்டு திகைத்தான். கடிகாரத்தின் பெயரைப் பார்த்ததுமே, அதனுடைய மதிப்பையும், விலையையும் உணர்ந்து பரபரப்படைந்தான்.

''சிங்கப்பூரிலிருந்து அப்பாவின் நண்பர் வாங்கி வந்தார். அப்பாவிடம் ஏற்கனவே இரண்டு கடிகாரங்கள் இருக்கின்றன. எனவே நான் இதை உங்களுக்காகக் கொண்டு வந்தேன்!''

சம்பத், நன்றிப் பெருக்குடன் அவளைப் பார்த்தான். ''ரொம்ப விலை இருக்குமே?'' என்றான்.

''அப்படி ஒன்றும் அதிகம் இல்லை. சிங்கப்பூரில் விலை மலிவுதான்'' என்றாள் நளினி. அதனுடைய விலையைக் கேட்க ஆசைப்பட்டான். ஆனால் விலையைக் கேட்பது நாகரிகமில்லை என்ற உணர்வு அவனைத் தடுத்தது.

கிட்டத்தட்ட இரண்டாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் இருக்கும். இரண்டாயிரம் ரூபாய், மலிவானது என்கிறாளே. இவளை மனைவியாக அடைந்து வாழ்வதற்கு இதை விட வேறு காரணம் தேவை இல்லை...

''இதை உன் கையாலேயே கட்டி விடேன்'' என்றான் சம்பத்.

''ஓ...''

நளினி அவனிடமிருந்து கடிகாரத்தை வாங்கினாள். அவன் இடது கையில் ஏற்கனவே கட்டியிருந்த கடிகாரத்தை அவிழ்த்து மேஜையின்மீது வைத்துவிட்டுக் கையை நீட்டினான். அவனுடைய கையில் கடிகாரத்தைக் கட்டிய போது, அவளுடைய முகம் சிவந்ததையும், உடல் பரபரத்தையும் உணர்ந்து கொண்டான்.

''உங்கள் கைக்கு இந்தக் கடிகாரம் அழகாயிருக்கிறது'' என்றாள்.

''இது வெறும் உபசார வார்த்தை. உன் மணிக்கட்டைப் பற்றி நான் சொன்னதற்குப் பதில் இது'' என்றான் சம்பத்.

நளினி சிரித்தாள். சிரித்தபோது, அவள் கன்னங்களில் விழுந்த குழிகளை ரசித்தான்.

''மனப்பூர்வமாகத்தான் சொன்னேன்'' என்றாள் நளினி.

அவளைப் பக்கத்து அறைக்குச் சாப்பிட அழைத்துச் சென்றான்.

''பரிமாற ஆள் இல்லையா?'' என்று நளினி கேட்டாள்.

''மூக்காண்டி ஐயரும் ஏதோ அவசரம் என்று போய் விட்டார். நாமே பரிமாறிக் கொள்ளலாமே?'' என்றான் சம்பத்.

''அப்படியானால் நானே பரிமாறுகிறேன். எனக்குப் பரிமாறுவதில் ரொம்ப இஷ்டம்.''

''ஒன்று செய்யலாம். நீ எனக்குப் பரிமாறு. நான் உனக்குப் பரிமாறுகிறேன்.''

''ஓ — எஸ்....''

இருவரும் அடுத்தடுத்து ஒரே பெஞ்சில் அமர்ந்தார்கள். ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டு சாப்பிட்டார்கள். சம்பத் சொன்னான்: ''நல்ல வேளை, மற்ற நண்பர்கள் வரவில்லை. வந்திருந்தால் நாம் விருந்தை இவ்வளவு ரசித்திருக்க முடியாது!''

நளினியும் ஆமோதிப்பது போல அவனைப் பார்த்தாள். பரிமாறும் போதும், சாப்பிடும் போதும் நெருக்கம் காரணமாக ஏற்பட்ட ஸ்பரிசங்களில் நளினிக்கு உண்டான பரபரப்பையும், சிலிர்ப்பையும் கவனித்துக் கொண்டிருந்தான் சம்பத்.

ஓரிரு முறை அவள் அவனுக்குப் பரிமாறிய போது, வேண்டாம் என்று தடுக்கும் பாவனையில் அவளுடைய கையை அவன் பற்றிய போது, அவள் உடல் முழுவதும் ஒருவித உணர்ச்சிப் பெருக்கால் நடுங்கியது. அந்த விருந்தில் பரிமாறப்பட்ட உணவின் ருசியைக் கூட உணர முடியாத அளவுக்கு அவள் உணர்ச்சி வசப்பட்டிருந்தாள்.

இருவரும் சாப்பிட்டு முடித்து விட்டுப் பக்கத்து அறைக்குள் வந்தார்கள். இரண்டு பேர் அமரக்கூடிய சோபா ஒன்றில் அவள் அமர்ந்தாள். எதிரே இருந்த ஒரு சோபாவில் அவன் அமர்ந்தான்.

''நளினி! இன்று மாதிரி நான் இவ்வளவு உற்சாகமாக ஒரு நாளும் இருந்ததில்லை'' என்றான் சம்பத்.

''நானும் அப்படித்தான்'' என்று பார்வையாலேயே சொன்னாள் நளினி. அதைப்புரிந்து கொண்ட சம்பத், மெதுவாக எழுந்து அவளிருந்த சோபாவில் அமர்ந்தான். மேஜை மீதிருந்த ஒரு பெரிய ஆல்பத்தை எடுத்து மடி மீது வைத்தவாறு விரித்தான்.

''என்னுடைய ஆல்பம்'' என்றான். அவன் ஆவலோடு படங்களைப் பார்க்கத் தொடங்கினாள்.

டென்னிஸ் பந்தயத்தில் சம்பத் பரிசுகள் வாங்கிய படங்கள் பல இருந்தன. அவன் ஒவ்வொரு பக்கமாகத் திருப்பினான். அவனுடைய படங்களை அவள் வெகுவாக ரசித்தாள்.

''உன்னுடைய படம் ஒன்று கொடேன் என் ஆல்பத்துக்கு'' என்றான்.

''ஐயோ ... என்னுடைய படம் ஒன்றும் நன்றாக இருக்காது'' என்றாள் நளினி.

''புகைப்படத்துக்கு ஏற்ற முகவெட்டு உனக்கு.''

''என்ன இருந்தாலும் நான் கறுப்புத் தானே?'' என்று நளினி கூறிய போது, அவளுடைய உள்ளத்தில் குமைந்து கொண்டிருந்த வருத்தம் வெளிப்பட்டது.

''கறுப்பு என்பது ஒரு குறையா? நளினி, அழகு என்பது நிறத்தில் இல்லை. கிளியோபாட்ரா கறுப்புதான். ஜூலியஸ் ஸீஸர்



மயங்கிக் கிடந்தானே! ஆண்டனி, ராஜ்யமே வேண்டாமென்று அவள் காலடியில் கிடந்தானே!'' என்றான் சம்பத்.

நளினி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

''நளினி! உண்மையைச் சொல்கிறேன். உன்னுடைய முகத்திலிருக்கும் கவர்ச்சியை உன்னுடைய நிறம் ஒருபோதும் பாதிக்காது'' என்று கூறிவிட்டு சம்பத் அவளை இன்னும் நெருங்கிய போது, அவனுடைய புஜம், அவளுடைய புஜத்தில் பட்டது. அவனுடைய பார்வையின் கனிவிலும், பேச்சின் கவர்ச்சியிலும், ஸ்பரிசத்தின் இனிமையிலும் தன் வசமிழந்தாள். வராந்தாவிலிருந்து சன்னல் வழியாக நுழைந்த வாடைக் காற்று, அவர்களைச் சுற்றி வளைத்தது.

''காற்று பலமாயிருக்கிறது. சன்னலை அடைத்து விட்டு வருகிறேன்'' என்று எழுந்து சென்ற சம்பத், வராந்தாவுக்குச் சென்று சன்னலை மூடினான். கைக்கடிகாரத்தைப் பார்த்தான். மணி எட்டு. வராந்தாவிலிருந்த மெயின் ஸ்விட்சில் கையை வைத்து, அதன் விசையை ஓசைப்படாமல் கீழே இழுத்தான். மறுகணம், மின்சார விளக்கு அனைத்தும் அணைந்து விட்டன.

''ஐயோ ...'' என்று பயத்தினால் நளினி கூவியது கேட்டது.

''இந்த எலக்ட்ரிக் டிபார்ட்மெண்டே இப்படித்தான். அடிக்கடி கரண்ட் போய்விடும்'' என்று சொல்லிக் கொண்டே அறைக்குள் நுழைந்தான் சம்பத்.

இருட்டில் நளினியின் உருவம் தெரியவில்லை. எங்கும் நிசப்தம். தூரத்தில் யார் வீட்டு நாயோ ஊளையிட்டுக் கொண்டிருந்தது. நளினியை நோக்கி நடந்தான் சம்பத்.

## 25. சாட்சியத்தின் விலை

அன்று ஞாயிற்றுக் கிழமையாதலால் மாலையில் டாக்டர் ராஜகோபால், கிளினிக்குக்குப் போகவில்லை. அவருடைய மனைவியும் குழந்தைகளும் சினிமாவுக்குப் போயிருந்தனர். இரவு ஏழரை மணி சுமாருக்கு நிம்மதியாகச் செய்தித்தாளைப் பார்த்துக் கொண்டு இருந்தவர், ஒரு செய்தியைப் படித்ததும் அதிர்ந்து விட்டார். மோசடி செய்ததாகப் பல டாக்டர்கள் மதுரையில் கைது செய்யப்பட்டதாகச் செய்தி. அதைப் படிக்கும்போதே பயத்தினால் அவர் உடல் நடுங்கியது. வியர்த்துக் கொட்டியது. செய்தி முழுவதையும் படித்துவிட்டுச் செய்தித் தாளை மடியில் போட்டவாறு சிந்தனையில் ஆழ்ந்தார். அந்தச் சமயத்தில் வாசலில் கார்ச் சத்தம் கேட்கவே வராந்தாவில் அமர்ந்திருந்த அவர் திரும்பிப் பார்த்தார். கருணாகரன், காரிலிருந்து இறங்கியது தெரிந்தது.

'' சார்! என்னுடைய வாழ்த்துக்கள் '' என்று இரைந்து கூவினார் ராஜகோபால்.

கருணாகரன் ஒன்றும் புரியாமல் விழித்தபடியே ஒரு சோபாவில் அமர்ந்தார்.

''உங்கள் மனைவி அன்று வெளியீட்டு விழாவில் பிரமாதமாகப் பேசினார்'' என்றார் ராஜகோபால்.

தம்முடைய மனைவியை டாக்டர் புகழ்ந்ததைக் கேட்டதும் கருணாகரனின் முகம் கன்றியது. மதுரத்தைப் பற்றி அவர் பேசுவதே கருணாகரனுக்குப் பிடிக்கவில்லை. ''அதிருக்கட்டும். நான் சொன்னதைப் பற்றி யோசித்தீர்களா ?'' என்று கேட்டார்.

''அதில் யோசிக்க என்ன இருக்கிறது ?''

''டாக்டர், உங்களுடைய சாட்சியத்தைத்தான் எல்லோரும் நம்பியிருக்கிறோம்.''

''அதற்கு நான் என்ன செய்ய முடியும் ? பரிசோதனைக் குறிப்பிலுள்ளபடிதான் நான் சொல்ல முடியுமே தவிர, மாற்றிச் சொல்ல முடியுமா ?''

''மாற்றிச் சொல்ல வேண்டாம். உங்களுடைய அபிப்பிராயமாகச் சொல்வதில் சங்கடம் இருக்காதே !''

'' எப்படி ?''

'' அந்தப் பெண்ணை அவன் கற்பழித்திருக்கலாம் என்று சொன்னால் போதும்.''

'' அதை நான் கண்ணால் பார்க்கவில்லை.''

'' கண்ணால் பார்க்க வேண்டும் என்ற அவசியமா ? மற்றச் சாட்சியங்களிலிருந்து யூகிக்க வேண்டியதுதானே ?''

''எப்படி யூகிக்க முடியும் ?''

''அவளை அவன் பலாத்காரம் செய்தபோது அவன் பிடிபட்டு இருக்கிறான். இது போதாதா, யூகிப்பதற்கு ?''

''போதும் என்றால் ஜட்ஜ் அவ்விதமே யூகித்துக் கொள்ளட்டுமே, நான் ஏன் அது பற்றிச் சொல்ல வேண்டும் ?''

''டாக்டர்! இதில் மற்றச் சாட்சியங்கள் பலவீனமாயிருக்கின்றன. அவன் கற்பழித்ததாக அவள் சொல்கிறாள். கண்ணால் பார்த்தவர்கள் யாரும் இல்லை. அவள் சத்தம் போடவே அவன் ஓடியிருக்கிறான். அவன் ஓடியபோது பிடித்திருக்கிறார்கள். அவர்கள் இருவருக்கும் தொடர்பு இருந்த போது யாரும் பார்க்கவில்லை. அவள் சொல்லும் சாட்சி ஒன்றுதான் பலமாயிருக்கிறது.''

''அது போதாதா ?''

''போதாது. அவனைப் பிடித்த இருவருமே அவனுடைய குடும்பத்துக்கு வேண்டாதவர்கள். அவர்களுடைய சாட்சியம் எடுபடாது. உங்களுக்கு ஒரு சிரமமும் இருக்காது. பிராஸிக்யூட்டர் உங்களிடம் கடைசியில், 'உங்கள் பரிசோதனையிலிருந்து இவளை இவன் பலாத்காரம் செய்தான் என்று சொல்லலாமா?' என்று கேட்பார். நீங்கள் 'ஆம்' என்று சொன்னால் போதும்.''

டாக்டர் யோசித்தார். கருணாகரன் தொடர்ந்து சொன்னார்:

''டாக்டர்! வெளிப்படையாகச் சொல்லிவிடுகிறேனே! உங்களுடைய பரிசோதனைக் குறிப்பில் பலாத்காரத்துக்கான அறிகுறிகள் எதுவும் இல்லை. அவள் உடலில் காயங்களோ அல்லது அவன் உடலில் காயங்களோ, அவள் எதிர்த்துப் போராடியதற்கான அறிகுறிகளோ எதுவும் இல்லை. இந்த நிலையில் அவளுடைய சாட்சியம் மட்டும் போதாது. நீங்களும் உதவி செய்தால்தான் பிராஸிக்யூஷன் பக்கம் வெற்றி கிடைக்கும்.''

''அப்படியானாலும், அவனோடு அவனுக்குத் தொடர்பு இல்லை என்கிறீர்களா?'' என்று டாக்டர் குழப்பத்தோடு கேட்டார்.

''அவனோடுதான் அவனுக்குத் தொடர்பு. ஆனால் அதில் பலாத்காரம் இல்லை.''

''அப்படியென்றால்?''

''சம்மதத்தின் பேரில் என்று வைத்துக் கொள்ளுங்களேன்.''

''ஐயோ! ஜட்ஜ் அந்த அபிப்பிராயத்துக்கு வந்துவிட்டாரா?''

''அப்படி வரவிடுவோமா? இது எங்களுக்கு மட்டும் தெரிந்த விஷயந்தானே! கடைசியில் அப்படி வந்துவிடக் கூடாது என்பதற்காகத்தான் உங்கள் உதவியை நாடுகிறோம்'' என்றார் கருணாகரன்.

டாக்டர் ராஜகோபால் யோசித்தார். பயமாயிருந்தது. கட்சித் தலைவரின் சொல்லைக் கேட்டுப் பின்னால் அவமானத்துக்கு உள்ளாகிவிடக் கூடாது என்று நினைத்தார். அருகில் கிடந்த செய்தித் தாள், காற்றில் படபடத்தது. அதில் வெளியாகியிருந்த செய்தி நினைவில் வந்து உறுத்தியது. பயம் சூழ்ந்து கொண்டது.

''அதை நான் சொல்ல முடியாது சார்! பரிசோதனையில் நான் கண்டு அறிந்தவை மட்டுந்தான் சொல்ல முடியும்'' என்றார் திடமாக.

''என்ன டாக்டர், திரும்பத் திரும்பச் சொல்கிறேன். ஒரே பிடிவாதமாயிருக்கிறீர்களே. இதில் இந்த மாவட்டத்தைச் சேர்ந்த கட்சித் தலைவர் அக்கறை கொண்டிருக்கிறார். நீங்கள் பிடிவாதம் பிடித்தால் பிறகு உங்களுக்குத்தான் கெடுதல்!''

''என்ன என்ன சார் செய்துவிட முடியும்?'' என்று இரைந்தார் டாக்டர்.

கருணாகரன் இலேசாகச் சிரித்தார். ''நீங்கள் இன்று மாலைச் செய்தித்தாளைப் பார்க்கவில்லையா?'' இதைக் கேட்டதும் டாக்டரின் உடல் சிலிர்த்தது.

''மதுரையில் பல டாக்டர்களைக் கைது செய்திருக்கிறார்கள். மத்திய அரசாங்க ஊழியர்களின் வைத்திய உதவி விஷயத்தில் அவர்கள் மோசடி செய்ததாக.''

''அதே மாதிரி நடவடிக்கையை இங்கும் எடுக்க ஏற்பாடு நடக்கிறது. மாவட்டத் தலைவரிடம் பல டாக்டர்களின் பெயர்கள் புகார்ப் பட்டியலில் இருக்கின்றன. அதில் உங்கள் பெயரும் இருக்கின்றன.''

''என்ன சார் மிரட்டுகிறீர்கள்?'' என்று டாக்டர் கோபத்தில் இரைந்தார்.

''நான் மிரட்டவில்லை. உண்மையைத் தான் சொல்கிறேன். மாவட்டத் தலைவரே லிஸ்டைக் காண்பித்து உங்கள் பெயரையும் காட்டினார்'' என்று கருணாகரன் கூறியதும் டாக்டரின் முகம் வெளுத்தது. பயத்தினால் உடல் நடுங்கியது.

''என்னுடைய பெயர் இருக்க முடியாதே'' என்றார். நாக்குக் குழறியது.

''உங்கள் பெயர், நீங்கள் கையெழுத்துப் போட்டுக் கொடுத்த பில்லின் நம்பர், மருந்துக் கடையின் பெயர் எல்லாமே அந்த லிஸ்டில் இருக்கின்றன. உங்களைப் போல் இன்னும் ஆறு அல்லது ஏழு டாக்டர்களின் பெயர்களும் இருக்கின்றன. ஸி. ஐ. டி. ரிப்போர்ட் சமர்ப்பித்திருக்கிறது. இப்போது நான் இங்கு வந்ததே மாவட்டத் தலைவர் அனுப்பித்தான். இந்தச் சமயத்தில் நீங்கள் அவருக்கு உதவி செய்யாவிட்டால் பிறகு அவர் உதவியை நீங்கள் பெற முடியாமல் போய்விடும்'' என்றார் கருணாகரன்.

''நான் உதவி செய்யமாட்டேன் என்று சொல்லவில்லையே? என் நிலைமையைச் சொன்னேன். நீங்கள் எப்படிச் சொல்ல வேண்டும் என்கிறீர்களோ அப்படிக் கோர்ட்டில் சாட்சியம் சொல்வதில் எனக்குச் சிரமம் ஒன்றுமில்லை. நான் பயப்படுவதெல்லாம் ஆவுடையப்பபிள்ளைக்குத்தான். என்னைக் குறுக்கு விசாரணை செய்கிறவர் என்னைப்

பிய்த்து எடுத்து விடுவார்'' என்றார் ராஜ கோபால், தணிந்த குரலில்.

''அந்தக் கவலையே வேண்டாம். நானே அவர் கோர்ட்டுக்கு வரமாட்டார்.''

'' ஏன்?''

''குளியல் அறையில் விழுந்து தொடை எலும்பு முறிந்து போய்க் கிடக்கிறார்.''

'' ஐயோ..... எப்போது ?''

'' கொஞ்ச நேரத்துக்கு முன்னால்தான். வருகிற வழியில் அவரைப் பார்த்துவிட்டுத் தான் வருகிறேன்.''

'' அப்படியானால், வழக்கை யார் நடத்து வார்கள் ?''

''அவருடைய ஜூனியர் சம்பத்!''

''அப்படியானால் எனக்குக் கவலையில்லை.''

'' நானே மத்தியானத்துக்கு மேல் உங்களை விசாரிப்பார்கள். அரை மணி நேரத்தில் விசாரணை முடிந்துவிடும்.''

''சரி. நான் கட்டாயம் வந்து விடுகிறேன்'' என்று டாக்டர் கூறியதும் கருணாகரன் திருப்தியோடு எழுந்தார்.

''நீங்கள் போகிற வழியில் மாவட்டத் தலைவரைப் பார்த்துவிட்டுப் போக வேண் டும்'' என்று வேண்டினார் டாக்டர்.

''நான் இப்போது நேரே அங்குதான் போகிறேன். நீங்கள் கவலையே படவேண் டாம். சி. ஐ. டி. லிஸ்டிலிருந்து உங்கள் பெயரை எடுக்கும்படி செய்து விடுகிறேன். யூ டோண்ட் ஒரி.....'' என்று கூறிவிட்டுக் காரில் ஏறினார் கருணாகரன். தம்முடைய சூழ்ச்சி பலித்துவிட்டதில் அவருக்குப் பரம திருப்தி. இந்த விஷயத்துக்கு மேலும் ஐந்நூறு ரூபாய் கொடுப்பதாகப் பேசநினைத்திருந்தார். ஆனால் டாக்டரை வேறுவிதத்தில் வீழ்த்தி விட்டதால் 'பஞ்சாயத்துப் போர்டு தலைவர் கொடுத்த ஆயிரம் ரூபாயை முழுசாகத் தாமே வைத்துக் கொள்ளலாம். தம்முடைய வலையில் டாக்டர் எவ்வளவு லகுவாக விழுந்து விட்டார் ! கருணாகரனுக்கு ஒரே உற்சாகம்.

காரைச் செலுத்திக் கொண்டு சம்பத் குடி யிருந்த தெரு வழியாக வந்துகொண்டிருந்த போது, எதிரே 'ரெனால்ட்' கார் ஒன்று சீறிப் பாய்ந்தவாறு வருவதைக் கண்டதும் திடுக் கிட்டு ஓரமாகத் தம் காரை ஒதுக்கினார். எதிரே வந்த கார், கண்மண் தெரியாத வேகத்தில் அவரைக் கடந்து, தெரு முனையில் பலத்த சத்தத்துடன் திரும்பி மறைவதைக் கண்டார். கார் தம்மைக் கடந்தபோது காரைச் செலுத்திக் கொண்டு சென்றது நளினி என்பதை உணர்ந்தார்.

'என்ன அவசரம் ? ஏன் இப்படிக் கடும் வேகத்தில் ஓட்டிக் கொண்டு போகிறாள்....?' என்று தனக்குள்ளேயே கேட்டுக் கொண்டார் கருணாகரன்.

(தொடரும்)

# கலியுகக் கண்ணன்



தேங்காய் சீனிவாசனைப் பல படங்களில் 'காமெடி ரோல்'களில் பார்த்துப் பழகியவர் களுக்கு இப்படத்தில் அவர் ஏற்றிருக்கும் கதாநாயகன் பாத்திரம் வியப்பை அளிப்ப தோடு களிப்பையும் அளிக்கும்.

கதையில், பிரமாதமான திருப்பம் எதுவும் இல்லாவிட்டாலும் கண்ணன் அவ்வப்போது சாம்புவின் கண்களுக்கு மட்டும் தோன்றி அறி வுரை கூறுவது, சாம்புவுடன் நேருக்கு நேர் வாதாடுவது, சாம்புவின் படகுக் காரை டிரை வர் இல்லாமல் ஓட்டிச் செல்வது ஆகியவைக ளெல்லாம்படத்துக்குச்சுவையூட்டும்நிகழ்ச்சிகள்.

கதை, வசனம், பாடல்கள் ஆகியவற்றின் பொறுப்பை ஏற்றிருக்கும் வாலி பாராட்டுக்கு உரியவர். துவாபர யுகத்துக் கண்ணனைக் கலியுகத் தில் நம்முன் கொண்டுவந்து நிறுத்தி எல்லாம்இறை வன் செயல் என்னும் அரிய கருத்தை எளிய முறை யில் காட்டியிருக்கிறார்.

சவுகார் ஜானகி சாம்புவின் மனைவி. நாத்திக வாதம் பேசும் கணவனை மடக்கிப் பேசும் திறமை யோடு, விநயமும், குடும்பப் பாசமும் அவர் நடிப்பில் அற்புதமாக வெளிப்படுகின்றன. ஜெய சங்கர், ஜெயசித்ரா இருவரும் படத்தின் கவர்ச்சிக்கு உறு துணையாயிருக்கின்றனர்.

நினைத்த இடத்தில் நினைத்தபோது தோன்றும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவுக்கும் சாம்புவுக்கும் இடை யில் நடக்கும் வாக்குவாதங்களே படத்தின் ஜீவன். நீலகண்டன் கலியுகக் கண்ணன். அமைதியாக நடித்துத் தெளிவாகப் பேசிக் கையொலியைப் பெறுகிறார்.

புகழ்பெற்ற கிருஷ்ணன் பஞ்சு டைரக்‌ஷனில் வெளி வந்திருக்கும் ''கலியுகக் கண்ணன்'' அரிய கருத்துப் பொதிந்த வசனங்களையும் சுவையான நிகழ்ச்சிகளை யும் கொண்ட நல்லதொரு பொழுதுபோக்குப் படம்.

—காந்தன்

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# ஜிஇஸி ஆஸ்ரம்
# நீண்ட காலம் ஒளிதருவதில் நிகரற்ற டியூப்லைட்டுகள், பல்புகள்:

- நீடித்த ஆயுள் வலிமையோடு தொல்லையற்ற உழைப்பைத் தட்டாமல் தருபவை அவை—ஏறுமாறான வோல்டேஜ் நிலைகளிலும் இயங்குதிறம் மாறாதவை.
- நீண்ட நெடுங்காலம் 'சிகரமான' ஒளி சிந்துபவை.





G.E.C. Osram

உகந்த விலையிலே தகுந்த ஒளி தருபவை ஜிஇஸி ஆஸ்ரம் டியூப்லைட்டுகள், பல்புகள்.

லின்டாஸ்-GEC/OTL/15-140 TM

REGISTERED No. M. [illegible]
Registered as a Newspaper in Ceylon